வேங்கடமே விண்ணோர் தொழுவதுவும் மெய்ம்மையால்
வேங்கடமே மெய்வினை நோய் தீர்ப்பதுவும் - வேங்கடமே
தானவரை வீழத் தன்னாழிப்படைதொட்டு
வானவரைக் காப்பான் மலை.

(நான்முகன் திருவந்தாதி-48)

"நித்ய சூரிகளால் உண்மையான பக்தியுடன் ஆராதிக்கப்படுவது திருமலை யாகும்; பாவங்களையும், உடலால் பெற்ற நோய்களையும் தீர்ப்பது திரு மலையாகும்; அரக்கர்கள் அழியும்படி தன்னுடைய சக்ராயுதத்தைக்கொண்டு போர்செய்து, தேவர்களை காத்தருளிய எம்பெருமான் வசிக்கும் திருமலை திருவேங்கடமலையாகும்."

# ஸப்தகிரி

ஜூன் - 1996

தனிப்பிரதி ரூ. 4 வருடச்சந்தா ரூ. 48/-

மலர் 27 இதழ் 1

சிறப்பாசிரியர் :

திரு. என். ரமேஷ்குமார், ஐ.ஏ.எஸ்.
செயலாட்சித்தலைவர்,
தி.தி.தேவஸ்தானம்,
திருப்பதி.

ஆசிரியர்:

திரு. என்.எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

அச்சிடுபவர்:

திரு. பி. மோகன்ராவ்,
மேலாளர்,
தி.தி.தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

பிரதிகளுக்கு:

EDITOR,
"Sapthagiri"
T.T.D., Tirupati.

## உள்ளுறை



## அட்டைப்பட விளக்கம்

முகப்பட்டை : ஆனந்தநிலைய திருக்காட்சி

முதல் உள்ளட்டை : பெரியாழ்வார்.

2-வது உள்ளட்டை : ஸ்ரீ வேங்கடேஸ்வரசுவாமி திருக்கோயில் - ரிஷிகேஷ் (உ.பி.)

பின்னட்டை : ஸ்ரீ பிரசன்ன வேங்கடேஸ்வரசுவாமி திருக்கோயில்- அப்ளாயகுண்ட்டா சித்தூர் மாவட்டம்.

# உங்களுடன்....

ஆண்டொன்று போனால் வயதொன்று போகும்! அதாவது ஆயுளானது குறைந்துவிடும். இவ் ஆயுள் குறைப்பு எல்லா உயிரினங்களுக்கும் பொருந்தும். வயது ஆக ஆக, மனித ஆற்றல் வளர்ந்து தேயும். ஆனால் அவனுள் உறையும் 'அறிவு'க்கு வயது கூட கூட அதன் ஆற்றல் பெருகும். அறிவுக்குப் பசி எடுக்க, எடுக்க அறிவு விரிவடையும். மனிதனது அறிவுப்பசிக்குத் தீனி போடுவன நூல்கள். மனிதநேய உணர்வுகளைத் தூண்டுவது ஆரோக்யமான பசியாகும். அதற்குரிய தீனி சமய நூல்களேயாம். எதிர்கால மனித சமுதாயம் பயனுள்ளதாக, பெருமையுடையதாக விளங்கவேண்டுமென்றுதான் நம் முன்னோர்கள் வேதங்களையும், புராண இதிஹாஸங்களையும் நமக்கு அளித்துள்ளனர். உணவுக்கும் உடைக்கும் அல்லல்படாத அன்றைய மக்கள் கற்க வேண்டியனவற்றை முழுமையாக அநுபவித்துக்கற்று, அதன் வழி வாழ்க்கையை வகுத்துக் கொண்டனர். காலத்தின் கோலத்தால் நாளும் பிரச்சனைகளால் தாக்கப்பெறும் இன்றைய மனிதன் மனயமைதியழந்து, கற்க வேண்டுவனவற்றை எளிதாக, விரைவாகக் கற்றுக்கொள்ள வேண்டிய கட்டாயத்தால் வரிவரியாகப்படித்துப் பண்பட வழிகோலும் நூல் கருத்துக்களை 'நுனிப்புல்' மேய வேண்டிய ஓர் அவசர சூழ்நிலையில் தள்ளப்பட்டுள்ளான்.

அந்தச் சூழ்நிலையினைத் தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டன இன்றைய பத்திரிகைகள். காலத்தோடும், அறிவுப்பசியோடும் போராட வேண்டிய நிலையில் உள்ள பத்திரிகைகள் மக்கள் மத்தியில் இடம் பெறவும் - அதாவது வியாபார நோக்கில் மற்றைய பத்திரிகைகளின் நடுவில் நிலைத்து நிற்கவும் - போராடவேண்டி உள்ளன. இந்த நிலையில் மக்கள் மத்தியில் இடம் பெறுவதைவிட மக்கள் மனதில் இடம்பெறுவதே தனது நோக்கம் என்ற வகையில் 'ஸப்தகிரி' சமயப்பத்திரிகை உலகில் தனக்கென ஒரு தனியிடத்தைப் பெற்று உள்ளது. ஸப்தகிரியின் விலை கணிசமாக உயர்த்தப்பட்டபோதும், காலம் தாழ்ந்து வெளிவந்துகொண்டிருக்கும் இத்தருணத்தும் 'ஸப்தகிரி'யின் வாசகர்கள் தொடர்ந்து அளித்துவரும் ஆதரவே 'ஸப்தகிரி'யானது மக்கள் மனதில் இடம் பெற்றுவிட்ட பத்திரிகையாக விளங்குவதற்கு ஒரு சாட்சியாக உள்ளது. ஆனால் இதனையே தனது ஒரு பலமாகக்கொண்டு, காலம் தாழ்ந்து வெளிவந்து கொண்டிருக்கும் தனது இந்த தற்காலிக பலவீனத்தை ஸப்தகிரி நியாயப்படுத்த விரும்பவில்லை.

நாட்டிலேயே அதிகமான வருமானம் பெற்றுவரும் திருமலை திருப்பதி தேவஸ்தானம் தனது 'ஸப்தகிரி' பத்திரிகையின் விலையினை உயர்த்தவேண்டிய அவசியம் என்ன என்று ஒருசில வாசகர்கள் கேட்டு எழுதியிருந்தார்கள்.

கேட்டது ஒரு சிலரே என்றாலும், பதில்சொல்லவேண்டிய கடமை தேவஸ்தான மேலாண்மைக்கு உண்டு என்பதை நாங்கள் அறிவோம். 'ஆற்றில் போட்டாலும் அளந்துபோடு' என்ற முதுமொழியினை நினைவுபடுத்த நாங்கள் முன்வராவிட்டாலும், ரூபாய் நான்காக தனிப்பிரதிவிலை ஏற்றப்பட்டாலும், அதன் தயாரிப்பு விலையினை 'ஸப்தகிரி'யால் சிறிதும் எட்டமுடியவில்லை என்பதை தெரிவிக்கவே விரும்புகிறோம். 'ஸப்தகிரி'யினை மேலாண்மை ஒரு வியாபார நோக்கத்தில் வெளியிடாவிட்டாலும், பத்திரிகையினை அதன் தன் சொந்தக்கால்களில் நிற்கவே எதிர்பார்க்கின்றது. முடவன் ஒருவனுக்கு ஊன்றுகோல் தேவை. காலிரண்டு வலுவாக இருந்திடும்போது, கைத்தடி எதற்கு? அந்த எண்ணத்தில்தான் 'ஸப்தகிரி'யானது தான் கொண்டு விளங்கும் செய்திகளின் தரமும், தன்னுடைய வாசகர்களின் ஆதரவும் ஒத்துழைப்பும் முழு அளவில் இருந்திடும்போது, முடிந்த அளவு லாபம்-நஷ்டம் இல்லாத நிலையில் இயங்கிடவே விழைகின்றது. அதனால்தான் கடந்த ஏழு ஆண்டுகளில் இரண்டாம் முறையாக இந்த விலை ஏற்றம் தவிர்க்கமுடியாததாகிவிட்டது. அடுத்து ஒரு பத்திரிகையின் தர்மம் அது காலத்தில் வெளிவருவதுதான். அந்த தார்மீக பொறுப்பினை 'ஸப்தகிரி' சற்றே மறந்துவிட்டதோ என்று வாசகர்கள் எண்ணுமளவு 'ஸப்தகிரி' கடந்த சில மாதங்களாக காலம் தாழ்ந்து வெளிவந்து கொண்டிருக்கின்றது. ஒரே நேரத்தில் அச்சக இயந்திரங்கள் இரண்டு பழுதுபட்டபடியாலும், தேவஸ்தானம் ஒரு பொது நிறுவனமாக செயல்படுவதால் அச்சுப்பணி சம்பந்தமான காகிதம், மை போன்ற பொருட்கள் வாங்குவதில் ஒரு சில கட்டாய 'நிருவாக தணிக்கை' முறைகளை எதிர்கொண்டதாலும் 'ஸப்தகிரி'யின் தாமதம் தவிர்க்கமுடியாததாகிவிட்டது என்பது முற்றிலும் உண்மையாகும். இக்குறைகள்(!) தீர்க்கப்பட்டுவிட்டபடியால் இரண்டு மூன்று மாதங்களில் 'ஸப்தகிரி'யின் வெளியீடு சீர்ப்பட்டுவிடும் என்றே உறுதி அளிக்கின்றோம். காலம் கடந்து 'ஸப்தகிரி' வெளிவருவதற்குக் காரணங்கள் பல கூறினாலும், வாசகர்களில் பெருமளவு மனச்சமாதானம் அடைய மாட்டார்கள் என்பது எங்களுக்குப் புரிகின்றது. ஆனால் எங்கள் முயற்சிகளையும் மீறி சூழ்நிலைகள் அமைந்துவிட்டதால், ஏற்பட்ட காலதாமதத்தினைப் பொறுத்தருளுமாறு வாசகர்களைக் கேட்டுக்கொள்கிறோம். வியாபார கண்ணோட்டத்தில் பார்க்காது, ஒரு சேவையாக 'ஸப்தகிரி' பத்திரிகை விற்பனையை மேற்கொண்டுவரும் 'ஏஜெண்டு'களின் பொறுமையினை இங்கு நாங்கள் எண்ணிப்பார்க்க மறந்திடவில்லை. இவ்விதழ்மூலம் தனது 27-ஆவது ஆண்டில் (மலரில்) அடியெடுத்து வைத்திடும் 'ஸப்தகிரி'யின் வளர்ச்சிக்கும், சிறப்புக்கும் தொடர்ந்து ஆக்கமும், ஊக்கமும் அளித்துவரும் வாசகர்களுக்கும், விற்பனைப் பிரதிநிதிகளுக்கும், கட்டுரையாசிரியர்களுக்கும் தனது நன்றியை தேவஸ்தான மேலாண்மை தெரிவித்துக்கொண்டு, 'ஸப்தகிரி' தனது பணியினைத் தொடர்ந்து எவ்விதக் குறையும், இடையூறுமின்றி ஆற்றிட, அவ் ஏழுமலையானின் திருவடிகளையே பணிகின்றது.



# செய்திச்சுருக்கம்

## அன்னமாசார்யா ஜெயந்தி

திருமலையான் பக்தரும், தெலுங்குமொழி பக்திக் கவிஞருமான ஸ்ரீதாள்ளபாக்க அன்னமாசார்யாவின் 588ஆவது ஜெயந்தி விழா வெகுவிமர்சையாக 3-5-96 முதல் மூன்று நாட்களுக்குக் கொண்டாடப்பட்டது. 3-5-96 அன்று காலை திருவேங்கடவன் மற்றும் அன்னமய்யாவின் திருவுருவப்படங்கள் திருப்பதி நகர முக்ய வீதிகளில் திருவீதி ஊர்வலமாகக் கொணரப்பட்டு, திருப்பதியிலுள்ள ஸ்ரீஅன்னமாசார்யா கலாமந்திரத்தில் எழுந்தருளச் செய்யப்பட்டன. பின்னர் திரு. பி. ராஜா ஐயர், திரு. வீரராகவன், திருமதி. மணி கிருஷ்ணசுவாமி உள்ளிட்ட பல இசைக்கலைஞர்கள் பங்கேற்ற 'கோஷ்டிகான' நிகழ்ச்சி இனிதே நடைபெற்றது. இதுபோது திருப்பதியை அடுத்துள்ள ஏர்ப்பேடு வியாஸ்ரமத்தின் தலைவர் சுவாமி பரிபூர்ணானந்தா அவர்கள் பங்கேற்று சிறப்புரையாற்றினார். தொடர்ந்து பக்தர்களுக்கு ஏழுமலையான் கோயில் பிரஸாதம் தி.தி. தேவஸ்தான செயலாட்சித் தலைவர் திரு. என். ரமேஷ்குமார் அவர்களால் விநியோகிக்கப்பட்டது.

அன்று மாலை திருமதி. டி. வர்த்தினி, திருமதி. எம். சுசீலா மற்றும் திரு. ராஜா ஐயர் ஆகியோரின் இசைக்கச்சேரிகள் நடைபெற்றன. அடுத்த இரண்டு நாட்களின் போது, குமாரி. ஜ்யோதிர்மாயி, திருமதி. கே. பத்மாவதி, திருமதி. பி. பத்மாவதி, திருமதி. வி.டி.எஸ். நீலா சந்திரசேகர், திருமதி. பிரேமா ஹரிஹரன், திருமதி. பிரேமா சங்கீதலக்ஷ்மி ஆகியோரின் இன்னிசைக்கச்சேரிகள் நடைபெற்றன.

* * *

## 'காட்சிநிலை' திறப்பு

திருமலைக் கோயிலில் ஸ்ரீஆனந்த விமான சிகரத்தினை கோயில் வெளியிலிருந்து கண்டு தரிசித்திடும் வகையில் கோயிலுக்கு வடக்கே உள்ள, 'இயற்கை புவியியல் வளைவு' எனும் இடத்தருகே 'காட்சி நிலை' அமைப்பு ஒன்று அண்மையில் தி.தி. தேவஸ்தான செயலாட்சித் தலைவர் அவர்களால் திறந்து வைக்கப்பட்டது. இந்த நிலையிலிருந்து திருமலை முழுவதையும் கண்டு ரசிக்கலாம்.

* * *

## திருமலையில்

இந்தியக்குடியரசுத் தலைவர் டாக்டர் சங்கர்தயாள் சர்மா அவர்கள் தம் துணைவியாருடன் திருமலைக்கு 25-5-96 அன்று வருகை புரிந்தார். திருமலையில் குடியரசுத்தலைவர் ஆந்திர மாநில முதல்வர் திரு. என். சந்திரபாபுநாயுடு மற்றும் தி.தி. தேவஸ்தான உயர் அலுவலர்களால் எதிர்கொள்ளப்பட்டார். அன்றுமாலை கோயில் மரியாதைகளுடன் வரவேற்கப்பட, திரு. சர்மா அவர்கள் இறைவனைத் தரிசித்தார். பின்னர் அடுத்தநாள் நடைபெற்ற பல்வேறு கோயில் சேவை நிகழ்ச்சிகளில் பங்கேற்றார். இவ்வருகையின் போது தி.தி. தேவஸ்தானத்தாரால் வெளியிடப்பட்ட 'வேதநாதாம்ருதம்' எனும் ஒலிப்பேழைகளை குடியரசுத் தலைவர் வெளியிட்டார். இது சம்பந்தமாக 'கையேடு' ஒன்றும் பிரசுரிக்கப்பட்டு வெளியிடப்பட்டது.

* * *

ஆந்திர மாநில முதல்வர் திரு. என். சந்திரபாபு நாயுடு அவர்கள் தன் குடும்பத்துடன் திருமலைக்கு 25-5-96 அன்று வருகைபுரிந்திட்டார். அன்று காலை கோயில் மரியாதைகளை ஏற்றபின்னர், கோயிலுக்குச் சென்று ஏழுமலையானைத் தரிசித்தார். கோயில் அரங்கிற்குள் முதல்வர்க்கு தி.தி. தேவஸ்தான செயலாட்சித் தலைவர் அவர்களால் கோயில் பிரஸாதங்களும், வஸ்த்ர புஹுமானமும் அளிக்கப்பட்டன. பின்னர் முதல்வர் அவர்கள் தரிசனத்திற்காக 'க்யூ'வில் காத்திருந்த பக்தர்களிடம் குறைகளைக் கேட்டறிந்து அதற்குரிய நடவடிக்கைகளை உடனடியாக எடுக்குமாறு கோயில் அதிகாரிகளை அறிவுறுத்தினார்.

* * *

## புதிய சட்ட அலுவலர்

தி.தி. தேவஸ்தானத்தில் புதிய சட்ட அலுவலராக நீதிபதி எஸ். அனந்தசயன பிரஸாத் அவர்கள் அண்மையில் பதவி ஏற்றார்.

* * *

## தேவஸ்தானத்தில் பதவிஉயர்வுகள்

தி.தி. தேவஸ்தானத்தின் உதவி செயலாட்சித்தலைவர் பதவிகளை வகித்துவந்த திரு. ஏ. சுப்ரமண்யம், திரு. பரமஹம்ஸா, திருமதி. சாவித்ரி,

திருமதி. சி. ஸ்ரீவள்ளி ஆகியோருக்குத் துணை செயலாட்சித் தலைவர்களாக பதவி உயர்வு அளிக்கப்பட்டுள்ளது.

* * *

## அபிதேயக அபிஷேகம்

திருப்பதியில் உள்ள தி.தி. தேவஸ்
தானத்தாரின் ஸ்ரீகோவிந்தராஜ சுவாமி கோயில் உத்ஸவர்க்கு ஆஷாடமாதம் ஜேஷ்ட நட்சத்திரத்தில் கொண்டாடப்பெறும் அபிதேயக அபிஷேகம் எனும் கோயில் நிகழ்ச்சி இவ்வருடம் 25-7-96 முதல் மூன்று நாட்களுக்குச் சிறப்பாக நடைபெறும்.

* * *

## கீதாசாரம்

எது நடந்ததோ, அது நன்ருகவே நடந்தது
எது நடக்கிறதோ அது நன்ருகவே நடக்கிறது
எது நடக்க இருக்கிறதோ அதுவும் நன்ருகவே நடக்கும்
உன்னுடையது எதை இழந்தாய்
எதற்காக நீ அழுகிருய்
எதை நீ கொண்டு வந்தாய் அதை நீ இழப்பதற்கு
எதை நீ படைத்திருந்தாய் அது வீணுகுவதற்கு
எதை நீ எடுத்துக்கொண்டாயோ, அது இங்கிருந்தே எடுக்கப்பட்டது
எதை நீ கொடுத்தாயே, அது இங்கேயே கொடுக்கப்பட்டது
எது இன்று உன்னுடையதோ அது நாளை மற்ருெருவருடையாகிறது
மற்ருெருநாள் அது வேருெருவருடையதாகும்
இந்த மாற்றம் உலக நியதியாகும்.

கீதையில், பகவான் ஸ்ரீ

கிருஷ்ண பரமாத்மா.



## புதிய சேவை

திருமலைக்கோயிலில் மூலவர்க்கு 'வஸ்த்ர பஹுமானம்' எனும் ஆடை அளித்தல் சேவை ஒன்று நடப்பில் இருந்து வருகின்றது. இச்சேவையில் அதிக அளவில் யாத்திரிகர்கள் பங்கேற்க விரும்புவதால் அவர்களுடைய முறை வரும்போது ஒரு சில ஆண்டுகள் கூட அதாவது குறைந்தபட்சம் ஐந்து ஆண்டுகள் கூட காத்திருக்க வேண்டியதாக உள்ளது. ஆகவே யாத்திரிகர்களின் வேண்டுதல்களை நிறைவேற்றும் வண்ணம் திருப்பதி அடுத்துள்ள ஸ்ரீநிவாச மங்காபுரத்தில் உள்ள ஸ்ரீகல்யாண வேங்கடேஸ்வரசுவாமி கோயிலில் இச்சேவையினை புகுத்த தி.தி. தேவஸ்தான மேலாண்மை முடிவு செய்துள்ளது. வெள்ளிக்கிழமைகளில் நடைபெறும் இச்சேவையில் பங்கேற்க விரும்பும் பக்தர்கள் துணிகள் (மேல்சட்டை மற்றும் உத்தரீயம்) அல்லது அதற்குரிய மதிப்புத் தொகையான குறைந்தபட்சம் ரூ. 15,000 நன்கொடையாக செலுத்தினால், நன்கொடையாளர்களைச் சார்ந்த ஐந்து நபர்கள் (நன்கொடையாளரையும் சேர்த்து) கோயிலில் நடைபெறும் அபிஷேகத்தில் பங்கேற்க அனுமதிக்கப்படுவர். கிருஹஸ்தர்க்கு (நன்கொடையாளர்க்கு) சேவை முடிவில் ஓர் அங்கவஸ்த்ரமும், இரவிக்கைத் துண்டும் பிரஸாதமாக அளிக்கப்படும். முழுத்தகவல்களுக்கு ஆங்கிலத்தில், "The Assistant Executive officer, Sri Govindarajaswamy Temple, Tirupati" எனும் முகவரியுடன் தொடர்பு கொள்ளுதல் வேண்டும்.

* * *

******************************

## மானிடர் வாழ்க்கை

திருமூலரின் திருமந்திரப்பாக்கள் வெறும் ஆன்மீக மெய்யுணர்வு மட்டுமின்றி ஆழ்ந்த விஞ்ஞான அறிவிலும் அவர் தேர்ந்தவராக இருக்கக்கூடும் என்பதைக் காட்டுகின்றன. நிலையற்ற மனித வாழ்க்கையைப் பற்றிக் கூறுகிருர். பெறுதற்கரிய மனித உடலைப் பெற்றவர் பயனுள்ள வழியைப் பின்பற்ருமல் வெறும் சுகபோத உணர்வுடனேயே காலங்கடத்துவதையும் அது எவ்வளவு பயனற்றது என்பதையும் நகைச்சுவையோடு பாடும் பாடலாவது:

அடப்பண்ணி வைத்தார் அடிசிலை உண்டார்
மடக்கொடியாரோடு மந்தனம் கொண்டார்
இடப்பக்கமே இறைநொந்ததே என்ருர்
கிடக்கப்படுத்தார் கிடந்தொழிந்தாரே.

--திருமூலர்-திருமந்திரம்

இப்பாடலின் மூலம் நிலையாமைத் தத்துவத்தை விளக்குகிருர்.

திருமதி. சு. பொன்னம்மாள் - முகலூர்.

# நம்மாழ்வாரும் திருவாய்மொழியும்

திரு. V. மணிசங்கர் - ஆரணி.

பாண்டிய நாட்டில் திருநெல்வேலி மாவட்டத்தில் தாமிரவருணி ஆற்றங்கரையில் ஆழ்வார்திருநகரி என்றழைக்கப்படும் திருக்குருகூரில் வேளாளர் குலத்தில் காரியார் என்ற வைணவப் பெரியாருக்கும் உடையநங்கை என்ற அம்மையாருக்கும் மகனாகப் பிறந்தார். தந்தை காரியாரும் தாயும் திருமாலிடத்து அன்பு கொண்டவர்கள். திருவன்பரிசாரம் என்ற ஊரிலுள்ள திருவாழ்மார்பர் என்பவரின் மகள் உடையநங்கை. அவர்கட்கு நீண்டநாட்கள் மக்கட்பேறு இல்லை.

அக்குறை தீர்க்க திருக்குறுங்குடியில் கோயில்கொண்டுள்ள இறைவரை வேண்டினர். அவ்விறைவன் அருளால் அவர்கட்குப் புதல்வராக நம்மாழ்வார் வைகாசித்திங்கள் விசாக நட்சத்திரத்தில் சடகோபர் என்னும் நம்மாழ்வார் பிறந்தார்.

சடகோபர் பிறந்ததிலிருந்தே பால் உண்ணுதல், பேச்சு போன்ற இயல்புகள் இல்லாதிருந்தார். அதுகண்ட ஈன்றெடுத்த தாய் மனங்கலங்கினாள். குழந்தை பிறந்த பன்னிரண்டாம் நாள் அக்குழவிக்கு 'மாறன்' என பெயர் சூட்டினர். அவ்வூரிர்கண் எழுந்தருளியுள்ள பொலிந்துநின்ற பிரான் முன் அக்குழவியை விட்டனர்.

அக்குழந்தை அருகிலுள்ள ஒரு புளிய மர நிழலில் அமர்ந்தது. நம்மாழ்வார் பதினாறு ஆண்டு காலம் பார்த்தல் பேசுதல் முதலியன இல்லாது இறைவனையே நினைத்துக்கொண்டிருந்தார். அந்நிலை பெற்றோரை பெரும் கவலைக்குள்ளாக்கியது.

மதுரகவி என்பவர் திருக்கோளூர் என்னும் திருப்பதியில் மறையவர் குலத்தில் சித்திரை நட்சத்திரத்தில அவதரித்தார். அவர் நான்மறைகள், ஆறங்கம் மற்றும் நல்லதமிழ்நூல்களையும் ஐயந்திரிபின்றிக் கற்றுத் தேர்ந்தார். அவர் அயோத்தி சென்றார். வடநாட்டில் பல திருப்பதிகள் சென்று திருமாலை வணங்கினார். கங்கையாற்றங் கரையில் தங்கியிருந்தபோது ஒருநாள் இரவில் தென்திசையில் ஒரு பேரொளியைக் கண்டு பெருவியப்படைந்தார். மறுநாள் இரவிலும் அதே திசையில் அப்பேரொளியைக் கண்டு ஆனந்தமடைந்தார்.

மதுரகவிகள் தெற்கில் ஏதோ அதிசயம் நிகழ்ந்திருக்கிறது என எண்ணினார். அதைக் காண தென்திசை நோக்கி அப்பேரொளியிருக்கும் திக்கில் நடந்தார். இரவில் நடப்பதும் பகலில் உறங்குவதுமாக இருந்தார். அவர் திருக்குருகூரை அடைந்ததும் அப்பேரொளி தோன்றவில்லை. அவ்வூர் மக்களிடம் "இவ்வூரில் யாதேனும் அதிசயம் நிகழ்ந்ததா?" எனக்கேட்டார். அவர்கள் புளியமரத்தடியில் உள்ள நம்மாழ்வாரைக் காட்டினர்.

நம்மாழ்வாரின் நிலையை தெரிந்துகொள்ள வேண்டி ஒரு சிறுகல்லை அவர் முனபோட்டு ஒலி உண்டாக்கினார். பின மதுரகவிகள் அவரிடம் "செத்த தன் வயிற்றில் சிறியது பிறந்தால் எத்தைத் தின்று எங்கே கிடக்கும்?" எனக்கேட்டதும் அதற்கு நம்மாழ்வார், "அத்தைத் தின்று அங்கே கிடக்கும்" என பதிலளித்தார். செத்தது என்பதன் பொருள உடல். உடல் அழகற்றது. அறிவற்றது. சிறியது என்பதன் பொருள் உயிர். உயிர் அணுவினுக்கணுவாய் உள்ளது. அது உடல் முழுமையும் பரவி அதில் நடைபெறுவனவற்றை அறிகிறது. அதனால் உயிர் சிறியது. பிறத்தல் மூலம் உயிர் தன் வினைகளுக்கேற்ப உடம்பை அடைகிறது. 'எத்தைத்தின்று எங்கே கிடக்கும்' என்பதன் விளக்கமாவது உடம்பைப் பெற்ற உயிர் எதனை அனுபவித்துக்கொண்டு எங்கே இருக்கும் என்பதாகும். உடம்பை அடைந்த உயிர் தன் வினைப்பயனை அவ்வுடலிலேயே அனுபவித்துக்கொண்டு செயல்படும் என்பதாம். அவ்வுயிர் பிறப்பிற்குரிய வினைமுடியும் காலம் வரை அவ்வுடலில் இருந்து செயல்படும் என்பதாகும்.

அவ்விடை கேட்டு மதுரகவிகள் பெருமகிழ்ச்சியடைந்தார். அவரையே ஆசிரியராகக் கொண்டு தங்கியிருந்தார். நம்மாழ்வார் இறைவனை நினைந்தவண்ணமிருந்ததால் அவர் மீது கவிபாடத்

தொடங்கினார். அவர்பாடிய கவிகள் திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி போன்ற பிரபந்தங்களாகும். திருவிருத்தம் ருக்வேதக் கருத்துக்களையும், திருவாசிரியம் யஜுர்வேத கருத்துக்களையும், திருவாய்மொழி சாமவேத கருத்துக்களையும், பெரிய திருவந்தாதி அதர்வண வேத கருத்துக்களையும் கொண்டவை என வேத விற்பன்னர்கள் கூறுகின்றனர்.

நம்மாழ்வாரின் நான்கு பிரபந்தங்களும் அந்தாதித் தொடையாகவே உள. ஒரு செய்யுளின் (அ) பாட்டின் ஈற்றடியின் எழுத்தேனும், அசையேனும், சீரேனும் மற்றொரு செய்யுளுக்கு முதலாக வருவது அந்தாதித் தொடையாகும். 'அந்தமுதலாத் தொடுப்பது அந்தாதி'.

நம்மாழ்வார் மற்ற எல்லோரினும் மிகச்சிறந்தவர் என்பது பொதுவாக அனைவராலும் கூறப்படுகின்றார். நம்மாழ்வார், மாறன், சடகோபன், பராங்குசன் என்ற திருநாமங்களைப் பெற்றுள்ளார்.

மற்ற ஆழ்வார்களைவிட, தலைமையும், பெருமையும், உடையவர் ஆதலால் நம்மாழ்வார் என்ற திருநாமமே விளங்கிற்று என உபதேசரத்தினமாலை கூறுகின்றது. நம்மாழ்வாருக்கு 'பிரபந்த ஞான கூடஸ்தர்' என்ற பெயரும் உண்டு. பிரபத்தி மார்க்கத்தை பின்பற்றும் வைணவர் அனைவருக்கும் தலைவர் என்பது இதன் பொருளாகும். மற்ற வேதங்களை விட சிறப்புடைய வேதமாக இந் நான்காவது நூல் இருப்பதால் திருவாய்மொழி என சிறப்புப்பெயர் இட்டுள்ளனர். திருவாய்மொழியின் பெருமைகளை 'ஆசாரிய இருதயம்' என்ற நூல் அழகாக விளக்குகிறது.

நம்மாழ்வார் பாண்டியநாட்டில் பிறந்தவர் ஆகையால் பாண்டிய நாட்டுத் திருப்பதிகளை மிகுதியாகப் பாடியுள்ளார். அவர்தம் பாசுரங்களில் முப்பத்தைந்து திருப்பதிகளை எடுத்துக்கூறியுள்ளார் எனக்கூறுகின்றனர், மலைநாட்டுத் திருப்பதிகள், சோழநாட்டுத் திருப்பதிகள் பற்றியும் பாடியுள்ளார். திருவேங்கடத்தை பல இடங்களில் பாராட்டியுள்ளார்.

நம்மாழ்வார இறைவனை நினைந்து பாடிக்கொண்டும் மதுரகவிகளுக்கு உபதேசித்துக் கொண்டும் முப்பந்தைந்தாண்டு காலம் இந்நிலவுலகில் உயிர் வாழ்ந்து பின் பேரின்ப வீடான பரமபதம் அடைந்தார். நம்மாழ்வார் பாசுரங்களில் வடமொழிச் சொற்கள் மிகக் குறைவாகவும், தூய தமிழ்ச் சொற்கள் அதிகமாகவும் உள.

நம்மாழ்வார் திருமால் திருவடிகளில் எப்போதும் உள்ளார் என்பது வைணவ சமயக் கொள்கையாகும். ஆகவே வைணவக் கோயில்களில் பெருமாளை வழிபடச் செல்வோர் தலையின்மேல் சடாரி வைக்கின்றனர். சடாரியில் இருதிருவடிகள் பதிக்கப்பட்டிருக்கும். சடகோபனே சடாரி என அழைக்கப்படுகிறார். இவை நம்மாழ்வாரின் திருநாமங்களாகும்.

நம்மாழ்வாரையும் அவர் யாத்த திருவாய்மொழியையும் புகழ்ந்து தமிழிலும், வடமொழியிலும் பல நூல்கள் உள. நம்மாழ்வாரின் சீடரான மதுரகவிகள் தன் குருவான நம்மாழ்வாரையும் அவர் இயற்றிய நூல்களையும் போற்றும் வண்ணம் 'கண்ணிநுண் சிறுத்தாம்பு' என்ற பத்துபாசுரங்கள் கொண்ட நூலை இயற்றியுள்ளார். அப்பாசுரம் 'கண்ணிநுண்சிறுத்தாம்பு' என தொடங்குகிறது. இது நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் இடம் பெற்றுள்ளது. மதுர கவிகள் அந்தணராகவும், நம்மாழ்வார் வேளாளராகவும் இருந்தும் கூட மதுர கவிகள் நம்மாழ்வாரே தனக்குத் தெய்வமெனக் கூறுகிறார். இதிலிருந்து அக்காலத்தில் பக்தர்களிடையே சாதி ஒரு தடையாக இல்லை என்பதனை அறிந்து கொள்ளலாம். நம்மாழ்வாரின் பாசுரங்களை இசையோடு பாடுவதே மதுர கவிகளின் பொழுது போக்காகும்.

**"நாவினால் நவிற்றின்ப மெய்தினேன்**
**மேவினேனவன் பொன்னடி**
**மெய்ம்மையே**
**தேவுமற்றறியேன் குருகூர்நம்பி**
**பாவினின்னிசை பாடித்திரிவனே"**

என 'கண்ணிநுண் சிறுத்தாம்பு' வில் பாராட்டியுள்ளார். மதுர கவிகள் பன்னிரண்டு ஆழ்வார்களோடு மதுரகவியாழ்வார் என அழைக்கப்பட்டு ஆழ்வார்களோடு எண்ணப்படுகிறார்.

கவிச்சக்கரவர்த்தி கம்பன் நம்மாழ்வாரின் திருவாய்மொழியை ஆராவமுத கவியாயிரம் என்கிறார். கம்பநாடன் நம்மாழ்வாரைப்பற்றி நூறு பாக்களைக் கொண்ட 'சடகோபரந்தாதி' என்ற நூலை இயற்றியுள்ளார். அவர் திருவாய்மொழியின்முன் மற்றகவிகள் பொருளற்ற கவிகளே எனக்கூறுகிறார்.

திருவாய்மொழியிலுள்ள பதிகத்தின் கருத்தை தொகுத்து ஒவ்வொரு வெண்பாவிலும்

கூறப்படுகிறது. அதற்கு 'திருவாய்மொழி நூற்றந்தாதி' எனப் பெயர்.

மாறன் அலங்காரம், மாறன் திருப்பதிக்கோவை, மாறனகப் பொருள், மாறன் கோவை போன்ற நூல்கள் நம்மாழ்வாரையும் அவர் இயற்றிய திருவாய்மொழியையும் புகழ்ந்து கூறும் நூல்களேயாம். திருவாய்மொழியிலிருந்து பலர் மேற்கோள்களை எடுத்துக்காட்டுகிறார்கள். திருக்குறளுக்கு உரை எழுதிய பரிமேலழகர் தம் உரையில் "அற்றது பற்றெனில் உற்றது வீடு" என்னும் திருவாய்மொழிப் பாசுரத்தை மேற்கோள் காட்டியுள்ளார்.

நம்மாழ்வார் இயற்றிய நான்காவது பிரபந்தம் திருவாய்மொழியாகும். அவர் இயற்றிய மற்ற பிரபந்தங்களைவிட சிறப்புப் பெற்றது. திருவாய்மொழி நூறு பதிகங்களைக் கொண்டது. ஓராயிரத்து நூற்றி இரண்டு பாசுரங்களைக் கொண்டது. பத்துப் பத்தாக அமைந்துள்ளது.

நம்மாழ்வார் இறைவனைக் கருணைக்கடல் என்றும் அவன் திருவடித்தாமரைகளில் தொண்டு செய்வது ஆன்மாக்களின் கடமை என்கிறார். அவன் அடியார்க்கு எளியவன் எனவும், தானே வந்து ஆட்கொள்ளும் தன்மையன் என்றும், ஒன்றுக்கும் பற்றாதவனை அருளால் ஆட்கொண்டது அவனது பெருந்தன்மையைக் காட்டுகிறது என்கிறார்.

"அறியாக் காலத்துள்ளே அடிமைக்
கண் அன்பு செய்வித்து
அறியா மாமாயத்தடியேனை
வைத்தாயால்"

என்று திருவாய்மொழிப்பாசுரத்தில் கூறுகிறார்.

அறிவு தோன்றாத இளம் பருவத்திலேயே இறைவனிடம் பேரன்பு கொண்டவர். அவ்வாறு அன்புகொள்ள இறைவன் அருள்புரிந்தான் எனக் கூறுகிறார். பிறப்பு முதல் இறுதி வரை திருமாலிடத்து பேரன்பு கொண்டு அவ்வின்பமே தம் இன்பம் என வாழ்ந்த பெருந்தகையாளர்; உலக இன்பங்களை ஒரு சிறிதும் விரும்பாதவர்.

"உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும்
வெற்றிலையுமெல்லாம் கண்ணன்"

என வாழ்ந்தவர் என திருவாய்மொழி மூலம் தெரிகிறது நம்மாழ்வார் எம்பெருமானை ஊனக்கண்களால் காணாமல் ஞானக்கண்ணால் கண்டு களித்தார். தேன், பால், சர்க்கரை ஆகியவற்றின் இன்பம் எம்பெருமானை நினைக்க தமக்கு உண்டாவதாகக் கூறுமிடத்து,

"தேனும் பாலும் கன்னலும்
அமுது மாகித் தித்திப்ப
யானும் எம் பிரானையே
ஏத்தினேன் யானுய்வானே"

என்ற பாசுரத்தால் அறியலாம். மக்களுக்குத் தேவையான சோறும் நீரும் போல அப்பெருமானை நினைக்கும் அன்பே தாம் உண்ணும் சோறும் குடிக்கும் நீரும் ஆகிறது என்று கூறுகிறார். இறை அன்பால் ஏற்பட்ட அவ்வின்பம் பொறியுணர்ச்சியைக் கடந்து உயிர்களிடத்தில் ஏற்பட்ட இன்பமென்பதை,

"வாரா வருவாய் வருமென் மாயா!
மாயா மூர்த்தியாய்
ஆரா அமுதாய் அடியேன் ஆவி
அகமே தித்திப்பாய்"

என்ற திருவாய்மொழிப்பாசுரத்தில் கூறுகிறார்.

நமமாழ்வார் இறைவனை நினைப்பது மட்டுமல்லாமல் அவனுக்கு வேண்டிய தொண்டினைச் செய்ய விழைகிறார். இன்ன பணி என்றில்லாது இறைவனுக்கு வேண்டிய எல்லாப் பணிகளையும் எப்போதும் செய்திடல் வேண்டும் என்பதை,

"ஒழிவில்கால மெல்லாம் உடனாய்
மன்னி,
வழுவிலா அடிமை செய்யவேண்டும்
நாம்
தெழிகுரல் அருவித் திருவேங்கடத்து,
எழில்கொள் சோதி எந்தை தந்தை
தந்தைக்கே"

என்ற திருவாய்மொழிப் பாசுரத்தில் கூறுகிறார்.

திருமாலின் திருமேனியின் உறுப்புக்கள் எல்லாம் தாமரை போன்றும் அவனது நீலவண்ணத்திருமேனி பாசடை போன்றும் உள்ளதால் அவனைப் பொற்றாமரைப் பொய்கை எனப்புகழ்கிறார்.

"மாயக்கூத்தா! வாமனா
வினையேன் கண்ணா!
கண், கை, கால்
தூய செய்ய மலர்களாச்
சோதிச் செவ்வாய் முகிழ்தா
சாயல் சாமத்திருமேனி
தண்பா சடையா, தாமரைநீள்
வாசத்தடம்போல் வருவானே!
ஒருநாள் காணவாராயே"

என்ற பாசுரத்தில் பகர்ந்துள்ளார்.

நம்மாழ்வார் தம் பக்தி படிந்த உள்ளத்தில் இறைவனது சகல கல்யாண குணங்களையும் அவன் அடியார்கட்கெல்லாம் எளியனாம் என்பதையும்

நினைந்து அவன பேரருளை அநுபவிப்பதை,

"கறந்த பால் நெய்யே!
நெய்யின் சுவையே!
கடலினுள அமுதமே, அமுதில்
பிறந்தவின் சுவையே!
சுவையதுபயனே!
பின்னைதோள் மணந்த
பேராயா!"

"தேனும் பாலும் கன்னலும்
அமுதும் ஆகித் தித்தித்து என்
ஊனில் உயிரில் உணர்வினில்
நின்ற ஒன்றை"

போன்ற இப்பாசுரங்களிலி ருந்து அறிந்து இன்புறலாம்.

நம்மாழ்வார் வாழ்நாளில் வாழ்ந்த சமகால சிறந்த புல வர்கள் வறுமையால் வாடி வதங்கி செல்வந்தரை நாடி, அவரது புகழ்பாடி அவர்கள் ஈந்த பொருளை ஏற்றுப் பெரி தும் மகிழ்ந்து, தங்கள் கவித் திறனை பொருளுக்காக விற்று வாழ்ந்து வந்தனர். இதைக் கண்ட நம்மாழ்வார் மனம் புண்பட்டு வருந்தினார். அதை எடுத்து இயம்பினும் செல்வந் தர்களுக்கு விரோதமாகவும் இருந்தது. இருப்பினும் சொல் வதே தம் கடமையென எண்ணி நம்மாழ்வார் அப்புலவர்களுக்கு அறிவுரை கூறினார். "என் நாவி லிருந்து உதிக்கும் இனிய கவி தையை வேறு ஒருவரின் புகழ் பாடக்கொடேன். திருவேங்க டமலையில் எழுந்தருளியுள்ள எம்பெருமான் புகழைப்பாடாது வேறு ஒருவருக்கு என் கவித் திறனைக் காட்டமாட்டேன்" என்பதை கூறுமிடத்து.

"சொன்னால் விரோதமிது ஆகிலும்
சொல்லுவன் கேண்மினோ
என்னாவில் இன்கவியானொரு
வர்க்கும் கொடுக்கிலேன்
தென்னாதெனாவென்று வண்டுமுரல்
திருவேங்கடத்து
என்னானை என்னப்பன்
எம்பெருமானுளனாகவே"

என்ற பாசுரத்தால் விளக்கு கின்றார். ஆழ்வார் கட லைப் பார்த்து, 'ஒலிக்கும்கடலே! நீ விரும்பிய பொருளானது கிடைக்கப்பெறாத காரணத்தால், அல்லும் பகலும் தூங்குவ தில்லை. அத்துடன் உளமுருகி ஏங்குகிறாய். தென் இலங்கை முழுவதும் தீக்கு உணவாக் கிய இராமனின் திருவடிகளை விரும்பி யான்பட்ட இன்னலை நீயும் படுகின்றாயோ" என்று கீழ் வரும் பாசுரத்தின் மூலம் கேட் கிறார்

"காமுற்ற கையறவோ டெல்லே
இராப்பகல்
நீ முற்றக்கண்டுயிலாய்
நெஞ்சுருகியேங்குதியால்
தீமுற்றத் தென்னிலங்கை
யூட்டினான் தாள்நயந்த
நீமுற்றத் துற்றாயோ வாழி
கனை கடலே"

திருவாய்மொழி பக்தி உணர் வுக்கு மட்டுமல்லாது மெய்யு ணர்விற்கும் சிறப்பாக விளங் குகிறது. வைணவ சமய பேரறிஞர் பெருமக்கள் இந்நூ லுக்கு விளக்கங்கள் எழுதி யுள்ளனர். திருவாய்மொழியில் உயர்ந்த தத்துவப்பாடல்களும் காதல்துறையில் அமைத்து இசைக்கும் பக்திப்பாடல்களும் இடம் பெற்றுள்ளன. அவற்றை நாமும் படித்து இன்புறுவோ மாக.

**********

(தொடர் கட்டுரை)

# ஸ்ரீவேங்கடேச ஸுப்ரபாதம்

ஸ்ரீமான் உ.வே. திருமலை
அநந்தாண்பிள்ளை க்ருஷ்ணமாசாரியர் - திருப்பதி.

**ஸூர்யேந்துபௌம புதவாக்பதி**
**காவ்ய ஸௌரி**
**ஸ்வர்ப்பாநு கேது திவிஷத்பரிஷத்**
**ப்ரதாநா: ।**
**த்வத்தாஸ தாஸ சரமாவதி**
**தாஸ தாஸா:**
**ஸ்ரீவேங்கடாசலபதே தவ**
**ஸுப்ரபாதம் ।। 18 ।।**

(ப) ஸூர்ய இந்து பௌம புத வாக்பதி காவ்ய ஸௌரி ஸ்வர்ப்பாநு கேது = சூரியன் சந்திரன் அங்காரகன் புதன் குரு சுக்ரன் சனி ராகு கேது என்கின்ற, திவிஷத் பரிஷத் ப்ரதாநா: = தேவர்களின் திரளில் முக்கியமானவர்கள், த்வத் தாஸ தாஸ = உன்னடியார்களின் அடியார்கட்கு, சரமாவதி தாஸ = கடைசி எல்லையான அடியார்களுக்கும், தாஸா: = அடியார்களாய், ஸந்தி = (காத்து) இருக்கின்றனர். ஸ்ரீவேங்கடா - ஸுப்ரபாதம்.

(க) திருவேங்கட நாயகா! நவக்கிரஹங்களென்னும் பிரதான தேவர்கள் உன்னடியார் தம் அடியாரடியார் தமக்கு அடியாரடியார் தம் அடியார்களாய் உன் திருவாசலில் காத்துள்ளனர். உனக்கிது நல்விடிவாகுக.

(வி) நவக்கிரஹங்கள் எம்பெருமானடியார்கட்குச் சரமாவதி தாஸர்களென்றதனால், அவை மற்றவர்கட்கு அவரவரின் ஜாதக ரீதியின்படி சில சமயங்களில் அசுப பலன்களைக் கொடுத்தாலும் எம்பெருமானடியார்கட்கு அப்படியில்லாமல் அடிமைகளாகப் புகுந்து எப்போதும் நல்ல பலன்களையே தருமென்ற கருத்துப் பெறப்படும். 'வள்ளலே உன் தமர்கட்கென்றும் நமன்தமர் கள்ளர் போல்' (பெரிய திரு 8-10-7) என்றபடி யமபடர்கள் திருமாலடியார் திறத்தில் எப்போதும் திருடர் போல் அஞ்சி ஒளிந்து வர்த்திப்பரென்றும், 'விதயச வைதிகா: த்வதீய கம்பீரமநோZநுஸாரிண:' (ஆள-ஸ்தோ 20) என்றபடி வைதிகமான விதிகளும் திருமாலடியார்களின் ஆழ்ந்த திருவுள்ளக் கருத்தைப் பின் செல்லுகின்றன என்றும் உண்மை நிலை இப்படியிருக்கும்போது நவக்ரஹங்கள் அவனடியார்கட்குத் தாஸர்களாகத் தட்டில்லையிறே.

**த்வத்பாத தூளிபரித ஸ்ப்புரிதோத்த**
**மாங்கா:**
**ஸ்வர்க்காபவர்க்க நிரபேக்ஷ**
**நிஜாந்தரங்கா: ।**
**கல்பாகமாகலந்யாऽऽகுலதாம்**
**லபந்தே**



ஸ்ரீவேங்கடாசலபதே தவ

ஸுப்ரபாதம் ।। 19 ।।

(ப) த்வத் பாததூளி = உன் திருவடிப்பொடியினால், பரித ஸ்ப்புரித = நிறையப்பெற்று விளங்குகிற, உத்த மாங்கா: = தலையையுடைய வர்களான உன்னடியார்கள், ஸ்வர்க்க அபவர்க்க = ஸ்வர்க்கத்திலும் மோக்ஷத்திலும், நிர பேக்ஷ நிஜ அந்தரங்கா: = ஆசையற்ற தம் மனதையுடையவர்களாய், கல்ப ஆகம ஆகலநயா = பிரளயம் வருமென்ற நினைவினால், ஆகுலதாம் லபந்தே = மனக்கலக்கம் அடைக்கின்றனர். ஸ்ரீவேங்கட........ ஸுப்ரபாதம்.

(க) திருவேங்கடநாயகா! உன்னைச் சேவித்து உன் ஸ்ரீபாத ரேணுவைத் தலையில் தரித்து, அதனால் ஸ்வர்க்க மோக்ஷங்களையும் வெறுத்த உன்னடியார்கள், கலியுகப்பரத்யக்ஷ தெய்வமான நீ கலியுகம் முடிந்து விட்டால் பரமபதம் சென்றுவிடுவாயோ என்று அஞ்சி நிற்கின்றனர். உனக்கிது நல்விடிவாகுக.

(வி) பகவத்பாத த்வயாகாரமாக பகவானது திருநெற்றியில் ஸமர்ப்பிக்கப்படும் பச்சைக் கருப்பூரப் பொடியே இங்குப் பாத தூளி எனப்பட்டதென்பர். பகவத் பாதாக்ருதியான திருமண் காப்பை பக்தர்கள் அணியலாமே தவிர பகவான் அணியலாமோ என்ற கேள்விக்கு, 'ஊர்த்வ புண்ட்ர திலகம் பஹுமாநாத் கிம் பிபர்ஷி வரத ஸ்வலலாடே' (வரதராஜஸ்த்வம் 26) பேரருளாளனே உன் பக்தர்களுக்கு ஊர்த்வகதியை (பரமபதத்தை) அடைவிக்கிறது இது என்னும் கௌரவத்தினால் ஊர்த்வபுண்ட்ர திலகமாகிய திருமண்காப்பை உனது நெற்றியில் தரிக்கிறாயா என்ன - என்ற கூரத்தாழ்வான திருவாக்கு விடைபகரும். அல்லது திருமண்காப்பு ஸமர்ப்பிக்கும் போதும் களையும் போதும் பச்சைக் கருப்பூரப் பொடிகள் திருப்பாதங்களில் உதிரும் அனுபவமுள்ள படியால், பாதத்தில் விழும் தூளி பாத தூளியென்றும் கொள்ளலாம். வெள்ளிக்கிழமையில் சாத்தின திருமண்காப்புப்பொடியை மறுவெள்ளிக்கிழமையில் பக்தர்களுக்கு விநியோகிப்பதும் அவர்கள் அதனை உட்கொள்ளுதலும் சிரஸ்ஸில் தரித்தலும் இன்றும் திருமலையில் வழக்கத்திலுள்ளமை அறியத்தக்கது.

கல்பாகமாகலநயா ஆகுலதாம் லபந்தே - பரமசிவன் பெருமாளிடம் 'ஸ்வாமி திருவேங்கடமுடையானே! தேவரீர் எவ்விடத்தில் எப்போதும் வாஸம் செய்வீரோ அவ்விடத்திலேயே அடியேனும் வாஸம் செய்ய வேணும்' என்று கேட்க மேக வண்ணனான திருவேங்கடவன் 'இம்மலையில் ப்ரளயம் வரும் வரையில் வசிக்கப்போகிறேன். மகாதேவனே நீயும் இம்மலைத் தாழ்வரையில் ஆக்நேய (தென்கிழக்குத்) திக்கில் வசிக்கக்கடவாய்' (வராகபுராணம் முதற்பகுதி 18ம் அத்தியாயம்) என்று கூறியதாக உள்ளதனால், சிரஞ்சீவிகளான மார்க்கண்டேயாதி முனிவர்கள் - ப்ரளயம் வந்துவிட்டால் திருவேங்கடவன் பரமபதம் திரும்பி விடுவன். அப்போது திருவேங்கடமுடையானாக நித்யஸூரிகளோடு வாசியற வானரங்களுக்கும் வேடர்களுக்கும் உட்பட ஸேவை ஸாதித்துக் கொண்டிருக்கும் ஸௌசீல்ய குணத்யநுபவத்தை இழக்க நேரிடுமேயென்று கலங்குகின்றனர் என்றபடி.

த்வத்கோ புராக்ரசிகராணி

நிரீக்ஷமாணா

ஸ்வர்க்கா பவர்க்க பதவீம்

பரமாம் ச்ரயந்த:

மர்த்யா மநுஷ்ய புவனே

மதிமா ச்ரயந்தே

ஸ்ரீவேங்கடாசலபதே தவ

ஸுப்ரபாதம் ।। 20 ।

(ப) ஸ்வர்க்க அபவர்க்க பதவீம் = ஸ்வர்க்கத்தின் வழியான தருமமார்க்கத்தையும் மோக்ஷத்தின் வழியான பக்தி மார்க்கத்தையும், பரமாம் = முழுவெல்லையளவும், ச்ரயந்த = அடைந்திருக்கிற, மர்த்யா: = மனிதர்கள், த்வத் கோபுர அக்ர சிகராணி = உன் கோபுரத்தின் நுனியிலுள்ள கலசங்களை, நிரீக்ஷமாணா: = பார்த்துக்கொண்டிருப்பவர்களாய், மநுஷ்ய புவனே = மனிதவுலகிலேயே, மதிம் = (இருக்கவேண்டுமென்ற) எண்ணத்தை, ஆச்ரயந்தே = அடைகின்றனர். ஸ்ரீவேங்கடாசல ஸுப்ரபாதம்.

(க) தான தருமங்களையும் பக்திப்ரபத்திகளையும் பூர்ணமாகச் செய்து, இவ்வுடல் கழிந்தவுடனே ஸ்வர்க்கத்தையும் மோக்ஷத்தையும் நாம் நிச்சயமாக அடைவோம் என்றிருப்பவர்கள் கூட, உனது கோபுரகலசங்களைக் கண்டமாத்திரத்திலேயே ஸ்வர்க்கமோக்ஷங்களில் ஆசையற்று மேன்மேலும் இந்த பூலோகத்திலேயே பிறந்து உன்னையே ஸேவிக்க வேண்டுமென்று நினைத்து இங்கு நிற்கின்றனர். உனக்கிது நல் விடிவாகுக.

(வி) நம்மாழ்வார் திருவாசிரியத்தில் (2) 'பரமபதத்தில் எ

பெருமானுடைய திருவடிக ளைத் தலையிலே சூடவேணு மென்று ஆசைப்பட்டு அவனை எப்போதும் இங்கே நினைந் துருகி இன்புறுவதை விட்டு விவேகிகளுடைய மனம் உலகம் மூன்றினொடு நல்வீடுபெற்றா லும் அவற்றைப் புருஷார்த்த மாகக் கொள்ள எண்ணுமோ' என்றருளினர். அவரே திருவந் தாதியில் (53) 'செங்கண்மாலே உன் திருக்கல்யாண குணங்க ளைச் சிந்தித்திருக்கும் சிந் தனையைவிட, உன்னடியார்க்கு நீ போரப் பொலியச்சொல்லி அருளும் பரம பதம் ரஸிக்குமோ' என்று அவனையே பார்த்துக் கேட்டருளினர். திருமழிசைப் பிரான் திருச்சந்த விருத்தத் தில் (108) ப்ரஹ்ம சிவேந்தி ராதி லோகங்கள் கிடைத் தாலும் பரம பதானுபவமே கிடைத்துச் சிறப்புத்தோற்ற இருக்கப்பெற்றாலும் எம்பெரு மானோடு சேரவேண்டுமென்று ஆசைப்பட்டு இங்கே இருத்த லைத் தவிர மற்றொன்றை நானெண்ணுவேனோ' என்றார். தொண்டரடிப்பொடிகள் திருமா லையில் (2) 'அச்சுதா அமர ரேறே இத்யாதி நாம ஸங்கீர்த் தனம் பண்ணி இன்புறுவதைத் தவிர பரமபதாநுபவானந்தம் பெற்றாலும் அதனை வேண் டேன்' என்றார். திருப்பாணாழ் வார் 'அணியரங்கனென்னமுதி னைக் கண்ட கண்கள் மற்றொன் றினைக் (பரமபதநாதனைக்) காணாவே' என்றார். அதுபோ லவே இந்தச்லோகத்தில் சொல் லப்பட்ட அதிகாரிகள் தாங் கள் ஸாதநாநுஷ்டாநங்களைப் பண்ணினவர்களாய் ஸ்வர்க்கத் தையோ பரமபதத்தையோ கிட் டக்கூடிய தகுதியைப் பூர்ணமா கப் பெற்றிருந்தும் அவற்றை உபேக்ஷித்துத் திருவேங்கடமு டையான் கோவில் கோபுரக் கலசங்களையும் அப்பெருமா னையும் ஸதா கண்டுகொண்டி ருக்க உதவுமதான இவ்வுலகில் பிறத்தலையே ஆசைப்படுகின் றார்கள் என்க.

ஸ்ரீபூமிநாயக தயாதிகுணா

ம்ருதாப்தே

தேவாதிதேவ ஜகதேக சரண்ய

மூர்த்தே ।

ஸ்ரீமந்நனந்த கருடாதி

பிரர்ச்சிதாங்க்ரே

ஸ்ரீவேங்கடாசலபதே தவ

ஸுப்ரபாதம் ॥ 21 ॥

(ப) ஸ்ரீபூமிநாயக = திரும களுக்கும் மண்மகளுக்கும் மண வாளனே, தயா ஆதி குண அம்ருத அப்தே = தயை முத லிய குணங்களென்னும் அமுதம் விளையும் கடலே, தேவ அதி தேவ = தேவர்களில் உயர்ந்த தேவனே, ஜகத் ஏக சரண்ய, மூர்த்தே = உலகிற்கு ஒரே புக லான திருமேனியுடையவனே; ஸ்ரீமந் செல்வம் நிறைந்தவனே, அநந்த கருட ஆதிபி: = ஆதி சேஷன் கருடன் முதலிய வர்களால், அர்ச்சித அங்க்ரே = பூஜிக்கப்பட்ட திருவடிகளை உடையவனே, ஸ்ரீவேங்கடா - ஸுப்ரபாதம்.

(க) ஸ்ரீதேவி பூமிதேவிகளின் மணவாளனாய், தயை முத லிய குணங்களுக்குக் கடலாய், தேவதேவனாய், உலகிற்கு ஒப் பற்ற புகலாய், நித்யசூரிக ளான ஆதிசேஷன் முதலியவர் களால் பூசிக்கப்பெற்றவனாய், செல்வமெல்லாம் செழிக்கப்பெற் றுத் திருவேங்கடத்தில் வாழும் திருமாலே! உனக்கிது நல்விடி வாகுக.

(வி) இந்த ச்லோகம் த்வ யத்தின் அர்த்தத்தை விளக் குகிறது. ஸ்ரீபூமிநாயக என்று பூர்வகண்டத்தில் ஸ்ரீமத் பதார்த்தமும், தயாதிகுணாம்ரு தாப்தே என்று ஸ்ரீமத்பதத் தில் கூறப்பட்ட பிராட்டி யைப்பந்தத்தினால் ஸ்வாதந்த்ர யம் தலைமடிந்து தலை யெடுத்த தயை வாத்ஸல்யம் ஸௌசீல்யம் ஸௌலப்யம் முத லிய குணங்களையுடைமை யாகிய நாராயண சப்தார்த்த மும், ஜகதேக சரண்ய மூர்த்தே என்ற மூர்த்தி சப்தத்தி னால ஸ்வோபலக்ஷண பூத மான சரண சபதார்த்தமும், இதுதன்னிலேயே சரணவ ரணத்திற்குத் தக்க திருமே னியுடைமை கூறப்பட்டதனால், அர்த்தாத். சரணம் ப்ரபத்யே என்றதன் அர்த்தமும், ஸ்ரீமந் என்று உத்தரகண்டத்திலுள்ள ஸ்ரீமத் பதார்த்தமான திவ்ய தம்பதித்வமும், தேவாதி தேவ என்று தேவாதி ஸகலசேஷித்வ (தலைமை) ரூபமான நாரா யண சப்தார்த்தமும், அநந்த கருடாதிபிரர்ச்சிதாங்க்ரே என்ற அர்ச்சனத்தினால் சதுர்த்தி யின் அர்த்தமான கைங்கர்ய மும், ஸ்ரீவேங்கடாசலபதே என் றதில் பாபம் போக்குதல் என்ற பொருளைத்தரும் வேங் கட சப்தத்தினால் கைங்கர்யத் தில் களையறுத்தலென்னும் நம:சப்தார்த்தமும் கூறப்பட்டுள் ளமை காண்க. இங்கு வேங் கட சப்தம் திருவேங்கடவனைக் குறிக்கும். ஸ்ரீவேங்கட:சாஸௌ அசலபதி:ச - ஸ்ரீவேங்கடாசல பதி: என்று விரித்துக்கொள்க 'தாமாச்ரயந்தி தவ வேங்கட ஸுப்ரபாதம்' (ஸ்ரீ.வே.ஸுப்ர-26) என்ற விடத்தில் வேங்கட சப் தம் மலையைக் காட்டாமல் மலையப்பனைக் காட்டுதல் கவ னிக்கத்தக்கது.

ஸ்ரீபத்மநாப புருஷோத்தம

வாஸுதேவ

வைகுண்டமாதவ ஜநார்த்தந
சக்ரபாணே ।
**ஸ்ரீவத்ஸ** சிஹ்ந சரணாகத பாரிஜாத
ஸ்ரீவேங்கடாசலபதே
தவ ஸுப்ரபாதம் ॥ 22 ॥

(ப) ஸ்ரீபத்மநாப = திருநாபியில் கமலத்தையுடையவனே, புருஷோத்தம = புருஷர்களில் மிகச்சிறந்தவனே, வாஸுதேவ = எங்கும் நிறைந்து விளங்குபவனே வைகுண்ட = வைகுந்தனே, மாதவ = திருமகள்நாதனே, ஜந அர்த்தந = துஷ்டஜனங்களை ஹிம்ஸை செய்பவனே, சக்ரபாணே = சக்ராயுதபாணியே, ஸ்ரீவத்ஸசிஹ்ந = (திருமார்பில்) ஸ்ரீவத்ஸமென்னும் மறுவை அடையாளமாக உடையவனே, சரணாகத பாரிஜாத = சரணமென்று வந்தவர்க்குப் பாரிஜாதம் போல் எல்லாவற்றையும் **தருபவனே**, ஸ்ரீவேங்கடா - ஸுப்ரபாதம்.

(க) வைகுந்த நிலையனாய், திருமகள் நாதனாய், புருஷோத்தமனாய், திருநாபிக்கமலத்தில் பிரமனைப் படைத்தவனாய், எங்கும் நிறைந்தவனாய், திருமறுமார்பனாய், சக்கராயுதத்தினால் அசுரரைக் கொன்று அடைக்கலம் புகுந்தவர்க்கு அனைத்தும் தருமவனான திருவேங்கட நாயகா உனக்கிது நல்விடிவாகுக.

(வி) பெருமானுடைய பெருமைகள் அனைத்தும் **கூறப்படுகின்றன** இதுதன்னில். **ஸ்ரீபத்மநாப** என்று திருநாபீகமலத்திலிருந்து பிரமதேவனையும் அவன் முகமாக லோகங்களையும் படைத்தமையும், புருஷோத்தம என்று அந்த லோகங்களிலுள்ள ஸம்ஸாரிகளாகிய க்ஷரபுருஷர்கள் முக்தர்களாகிய அக்ஷரபுருஷர்கள் என்றிவர்களைவிட உயர்த்தியும், வாஸுதேவ என்பதனால் தன்னால் படைக்கப்பட்டும் மற்றும் நித்தியமாயுமுள்ள பொருள்கள் அனைத்திலும் வியாபித்து அவற்றின் குற்றமேதும் தட்டாமையும், விகுண்டாநாம் அயம் என்ற வ்யுத்பத்தியுடைய வைகுண்ட சப்தத்தினால் பகவதனுபவத்தில் தடையற்ற நித்ய ஸூரிகட்குத் தலைவனானமையும் வைகுண்டலோக நாயகனானமையும், ஸ்ரீவத்ஸ சிஹ்ந என்று திருமறுமார்பனாய் அழகிய திருமேனியுடைமையும், மாதவ என்று முன்கூறிய பெருமைகளெல்லாம் காட்டிலெறித்த நிலாவாகாமல் ஸபலமாக்கும் பிராட்டிக்கு மணவாளனானமையும், சக்ரபாணே ஜநார்த்தன என்று சக்கராயுதத்தைக் கையிலேந்தித் துஷ்டர்களை ஹிம்ஸிக்குந் தன்மையும், சரணாகத பாரிஜாத என்று முற்கூறியதற்கு நேர்மாறாகத் தஞ்சமடைந்தவர்க்குப் பாரிஜாதம் போல் அவர்கள் விரும்பிய ஐச்வர்ய கைவல்ய கைங்கர்யங்களை அளிக்கும் பான்மையும் ஸ்ரீவேங்கடாசலபதே என்பதனால் முன்சொன்ன பெருமைகளெல்லாம் திருவேங்கடமுடையானாயிருக்கும் நிலையில் பிரகாசிக்கின்றமையும் அறிவிக்கப்பட்டனவாகும்.

கந்தர்ப்பதர்ப்பஹர ஸுந்தர
திவ்ய மூர்த்தே
காந்தாகுசாம்புருஹகுட்மல
லோலத்ருஷ்டே ।
கல்யாண நிர்மல குணாகர
திவ்ய கீர்த்தே
ஸ்ரீவேங்கடாசலபதே
தவ ஸுப்ரபாதம் ॥ 23 ॥

(ப) கந்தர்ப்ப தர்ப்ப ஹர ஸுந்தர திவ்யமூர்த்தே = மன்மதனுடைய மதத்தைப் போக்கும் அழகிய உயர்ந்த திருமேனியை உடையவனே, காந்தா குச அம்புருஹ குட்மலலோல த்ருஷ்டே = காதலியாந் திருமகளின் திருநகில்களென்னும் தாமரைமொட்டுகளில் பேராசை கொண்ட திருக்கண்களை உடையவனே, கல்யாண நிர்மல குண ஆகர = மங்களமாய்க் குற்றமற்ற குணங்களுக்கு நிதி போன்றவனே, திவ்ய கீர்த்தே = நற்பண்புகள் பெற்றவனே, ஸ்ரீவேங்கடா - ஸுப்ரபாதம்.

(க) மன்மதன் உன்னைக் கண்டு மயங்கி, தானே அழகனென்னும் கருவத்தை விட்டுவிட, நீயும் மயங்கிப் பார்க்கும் அத்தனைப் பேரழகியான திருமகளால் தலைதூக்கப்பெற்ற கல்யாண குணங்கட்கு இருப்பிடமானதால் நிகரில்லாத புகழுடையவனே, உனக்கிது நல்விடிவாகுக.

(வி) இதில் முதற் பாதத்தினால் 'ஸாக்ஷாத் மந்மதமந்மத:' (ஸ்ரீபாக 10-32-2) என்னும் அர்த்தம் குறிக்கப்படுகிறது. இரண்டாம் பாதத்தினால் 'யுவதி: ச குமாரிணீ' - குமரியாயிருந்து வைத்தே யௌவனம் வந்து தலைகாட்டப் பெற்றவள் என்று கூறப்பட்ட பிராட்டியின் இளமைப் பருவம் கூறப்படுகிறது. யுவாகுமார: 'சிறிதே குமாரப்பருவமுடையவனாய்ப் பூர்ணயௌவனமுடையவன் என்று குறிக்கப்பட்ட எம்பெருமானுக்கு ஒத்த இளம்பருவம் பிராட்டியினுடையது என்றபடி. இங்ஙனம் இருவரின் அழகு கூறப்பட்டதனால் பெருமாளுக்குப் பிராட்டியோடுண்டான போகம் ப்ராக்ருதமாய் (குற்றமுடையதாய்) நம்போல்வாரின் போகம் போலிருக்குமோவென்னும் ஐயம் உண்டாக அவகாசம் உண்டு. அது

மூன்றும் பாதத்தில் உள்ள 'நிர் மலகுணகர' என்பதனால் தீர்க் கப்படுகிறது. குற்றமற்ற குணங் கட்குக் கொள்கலமானவனிடத், தில் ஏதும் குற்றமிருக்கத் தகு தியில்லையன்றோ? இப்படியா னால் பெருமானுக்குப் பிராட் டியுடன் போகம் எத்தகையது என்னில், ஸ்ரீவைகுண்டகத்யத் தில் 'ஸ்ரீமத: சரணாரவிந்தயுகளம்' என்றவிடத்தில் ஸ்ரீமத்பதத்தை விவரித்தருளாநின்ற பெரிய வாச்சான்பிள்ளை "ஸ்ரீமத: - போகஸ்ரோதஸ்ஸில் (= போக வெள்ளத்தில்) கரைகாண்கைக்கு ஸஹாயபூதையான ஸாக்ஷாத் லக்ஷ்மியைத் தனக்கு ப்ர தான மஹிஷியாய் உடை யவனுடைய, இவனுக்கு ஸம்

ஸாரி ஸாதாரணமான போக மன்றே. அவாப்த ஸமஸ் தகாமதயா ஆனந்தமயனாயுள் ளவனுக்கு நாச்சிமாரோட்டைச் சேர்த்தியாலே பிறக்கும் போக மாவது ஏன்? அதில் ஸஹா யமாவது என்னென்பது? என் னில்; இவனுக்கு போகமாவது ஆச்ரிதோஜ்ஜீவநம். (தன்னை யடைந்தவர் மோக்ஷம் பெறு தல்) அதுக்குப் புருஷகார பூதையாய் நின்று சேரவிடுகை (பிராட்டி) ஸஹாயபூதையாகை யாவது" என்று அருளியவற் றால் போகமின்னதென்று தெளி தல் தகும். தன்னைக் கண் டவுடனே அனைவரும் சர ணாகதி செய்யும்படியான அழ கைப்பெற்ற பகவான் பிராட் டியின் குசகுட்மலமென்று மறைத்துச் சொல்லப்பட்ட அவ ளது பக்தியின் ஆரம்பநிலை யிலே மயங்கி அவள் புரு ஷகாரம் செய்தவர்களுக்கு ஐச் வர்யாதிகளை அளிக்கிறானென் பது முதலிரண்டு பாதங்களில் தேர்ந்த கருத்து.

மீநாக்ருதே கமட கோல
ந்ருஸிம்ஹ வர்ணிந்
ஸ்வாமிந் பரச்வததபோதந
ராமசந்த்ர ।
சேஷாம்சராம யதுநந்தன
கல்கி ரூப
ஸ்ரீவேங்கடாசலபதே
தவ ஸுப்ரபாதம் ॥ 24 ॥

(ப) மீந ஆக்ருதே = மீனின் திருவுருவம் தரித்தவனே, கமட = ஆமையானவனே, கோல = வராஹனே, ந்ருஸிம்ஹ = நர ஸிம்மஹனே, வர்ணிந் = வாம னப் பிரமசாரியே, பரச்வ தத போதந = கோடரிப்படை யையுடைய பரசுராமமுனியே, ராமசந்த்ர = இராமசந்திரனே, சேஷாம்சராம = ஆதிசேஷனின் அம்சம் கலந்த பலராமனே, யதுநந்தந = யாதவனான கண்ணா, கல்கிரூப = கல்கியுரு வம் தரிப்பவனே, ஸ்வாமிந் = இப்படியவதரித்து தலைவனா னவனே, ஸ்ரீவேங்கடா - ஸுப் ரபாதம்.

(க) பத்து அவதாரங்க ளைச் செய்து நல்லோர்க்குப் பகைவர்களான அரக்கரசுரரைத் தொலைத்து எம்மை ஆட் கொண்ட தலைவனாகிய திரு வேங்கடநாதா உனக்கிது நல் விடிவாகுக.

(வி) கீழ்ச்லோகத்தில் வந்த கல்யாண குணப்ரஸ்தாவத் தாலே நினைவுக்கு வந்த அவதாரங்களை அருளிச்செய் கிறார் இதில். குணபரீ வாஹங்களன்றோ திருவவதாரங் கள். அதாவது ஜ்ஞாநம் சக்தி தயை வாத்ஸல்யம் முதலிய குணங்களை வெளிப்படுத்துவ தற்காகவே உண்டாவன பகவா னுடைய திருவவதாரங்களென்ற படி.

நா சாஸெள ஸிம்ஹ:ச - ந்ருஸிம்ஹ:- உடலால் மனித னும் தலையால் சிம்ஹமுமான அவதாரம். வர்ணீ - பிர மசாரியான வாமனன். 'வர் ணிநோ ப்ரஹ்மசாரிண:' என்ற அமரகோசம் காண்க. வர்ணீ= துதிக்கப்படுமவன். ஸாளக்ரா மத்தோடு ஒத்த இயற்கையான தூய்மையுடையவனாகப் போற் றப்படுகிறானிறேமாணி. பரச் வதம் = கோடாலி. 'பரசு: ச பரச்வத:' என்பது அமர கோசம். ராமசந்த்ர:- பதினாறு கலைகளைக் கொண்ட சந் திரன் போன்று ஸௌசீல் யம் வீர்யம் முதலிய பதினாறு குணங்களைக் கொண்ட இராம பிரான் ராமசந்திரனெனப் பட்டான். 'தேவக்யா ஜடரே கர்ப்பம் சேஷாம்சம், தாம மாம கம் - தத் ஸந்நிக்ருஷ்ய ரோஹிண்யா உதரே ஸந்நிவே சய (ஸ்ரீபாகவதம் 10-2-8) என் னுடைய தேஜஸ்ஸாய் ஆதிசே ஷனென்று பெயர்பெற்ற தேவ கியின் கர்ப்பத்தை எடுத்துச் சென்று ரோஹிணியின் வயிற் றில் சேர்த்துவிடு என்று கண் ணனாய் அவதரிக்க இருக்கும் திருமால் யோகமாயைக்குக் கட் டளையிட்டதனால் ரோஹிணி யின் மகனான பலராமன் ஆதி சேஷாம்சமென்பது தெளியப்ப டும். யதுகுலத்தில் உதித்த கண்ணபிரான் யதுகுலத்த வர்க்கு ஆனந்தத்தை உண்டாக் குவதனால் யதுநந்தன: எனப் பட்டான். கலியுகமுடிவில் திரு மால் வெள்ளைக்குதிரை மீதே றிப் பாவிகளைத் தன்கைவாள் கொண்டு வெட்டித் தள்ளுவன் என்று புராணம் கூறும். கல்க: = வெள்ளைக்குதிரை,' அதையு டையவன் கல்கீ.

ஏலாலவங்ககநஸார ஸுகந்தி
தீர்த்தம்
திவ்யம் வியத்ஸரிதி ஹேமகடேஷு
பூர்ணம்

த்ருத்வாஸ்த்ய வைதிக
சிகாமணய: ப்ரஹ்ருஷ்டா:
ஸ்ரீவேங்கடபதே
தவ ஸுப்ரபாதம் ||25||

(ப) வைதிக சிகாமணய: = வைதிகர்களில் தலைசிறந்தவர்கள். வியத் ஸரிதி = ஆகாசகங்கையில் (இருந்து) ஹேம கடேஷு = தங்கக் குடங்களில், பூர்ணம் = நிரப்பிய, திவ்யம் தீர்த்தம் = உயர்ந்த தீர்த்தத்தை, ஏலா லவங்க கநஸார ஸுகந்தி = ஏலக்காய் இலவங்கம் பச்சைக் கருப்பூரம் என்ற இவற்றால் மணம் கமழும்படி, த்ருத்வா = (சிரஸ்ஸில்) தரித்துக்கொண்டு, ப்ரஹ்ருஷ்டா: = மிக மகிழ்ச்சியுடையவர்களாய், திஷ்டந்தி = (இங்கு வந்து) நிற்கின்றனர். வேங்கடபதே = வேங்கடநாயகா, தவஸுப்ரபாதம் = உனக்கு இது இல்விடிவாகு.

(க) வைதிகோத்தமர்கள் ஆகாச கங்கையில்தீர்த்தத்தைத் தங்கக் குடங்களில் நிரப்பிப் பரிமளமும் சேர்த்துத் தலையில் தரித்துக் கொண்டுவந்து, உன்திருவாராதனத்துக்காகக் காத்திருக்கின்றனர். திருவேங்கடநாதா உனக்கிது நல்விடிவாகுக.

(வி) பாபவிநாசதீர்த்தத்திலிருந்து திருமலைநம்பிகள் குடத்தில் எடுத்துவந்து பெருமானுக்கு ஸமர்ப்பித்துக்கொண்டிருந்த திருமஞ்சன தீர்த்தம் பின்பு பகவானாணையின்படி ஆகாச கங்கையிலிருந்து கொண்டுவரப் பட்டபடியால், 'வியத்ஸரிதி' எனப்பட்டது. விவரம் திருமலையொழுகில் காணத்தக்கது. வைதிக சிகாமணய:- வேதம் அறிந்து அதன்படி நடப்பவர்களில் ச்ரேஷ்டர்கள். இங்ஙனம் குறிக்கப்படுவர் திருமலை நம்பிகளின் வம்சத்தவர்களான தோழப்பர்கள். இவர்கள் இங்குக் கூறியுள்ளபடி இன்றும் ஆகாசகங்கையிலிருந்து திருமஞ்சனம் கொண்டுவரும் கைங்கர்யத்தையும் வேத பாராயணம் செய்யும் தொண்டினையும் செய்துவருகின்றமை கண்கூடாகக் காணலாம். இந்நூலாசிரியராகிய அண்ணங்கராசார்யரும் தாழப்பரின நியமன்த்தின்படி சிலகாலம் திருமலையில் திருமஞ்சன கைங்கர்யம் செய்து வந்தமை இவர் சரித்திரத்தில் காணத்தக்கது. ஆகையால் இதில் ஆதரம் தோற்ற இவர் இதனை அருளிச் செய்கிறபடி. கைங்கர்யரூபமாகச் செய்கின்றமையால் ப்ரஹ்ருஷ்டா: எனப்பட்டது.

பாஸ்வாநுதேதி விகசாநி
ஸரோருஹாணி
ஸம்பூரயந்தி நிநதை: ககுபோ
விஹங்கா:
ஸ்ரீவைஷ்ணவா: ஸததமர்த்தித
மங்களாஸ்தே
தாமாச்ரயந்தி தவ வேங்கட
ஸுப்ரபாதம் ||(26)

(ப) பாஸ்வாந் = சூரியன், உதேதி = உதிக்கிறான், ஸரோருஹாணி = தாமரைமலர்கள், விகசாநி (ஸந்தி) = மலர்கின்றன; விஹங்கா: = பறவைகள், ககுப: = திசைகளை, நிநதை: = (தம்) ஒலிகளால், ஸம்பூரயந்தி = நிரப்புகின்றன. ஸ்ரீவைஷ்ணவா: = ஸ்ரீவைஷ்ணவர்கள், ஸததம் = எப்போதும், அர்த்தித மங்களா: = (உனக்கு) மங்களங்களை வேண்டுமவர்களாய், தேதாம = உனது திருக்கோயிலை, ஆச்ரயந்தி = அடைந்திருக்கின்றனர். வேங்கட = வேங்கடவா, தவ ஸுப்ரபாதம் - உனக்கிது நல்விடிவாகுக.

(க) கதிரவன் தோன்றுகின்றான், தாமரைகள் மலர்கின்றன, பறவைகள் சிலம்புகின்றன, உனக்கு மங்களம் உண்டாகவேண்டும் என்று எப்போதும் வேண்டும் பெரிய கேள்வி ஜீயர் ஸ்வாமிகள் முதலான ஸ்ரீவைஷ்ணவர்கள் நின் கோயில் வாசலை அடைந்திருக்கின்றனர். வேங்கடவனே உனக்கிது நல்விடிவாகுக.

(வி) எம்பெருமானுக்கு எப்போதும் பல்லாண்டு பாடுமவர்கள் - எம்பெருமானார் ஸ்தானத்தில் பட்டாபிஷிக்தரான பெரிய ஜீயர் ஸ்வாமி சிறிய ஜீயர் ஸ்வாமி ஏகாங்கிகள் திருமலையனந்தாழ்வான் வம்சத்தவர் அரையர்குலத்துதித்தவர் முதலிய ஸ்ரீவைஷ்ணவர்களாவர்.

பாகவதர் பரமபாகவதர் ஏகாந்திகள் பரமைகாந்திகள் என்றிப்படி சிலர் உளர். மோக்ஷத்திற்காகப் பக்தி செய்யுமவர் பாகவதர்கள். அதற்காகப் பிரபத்தி செய்யுமவர் பரமபாகவதர். எம்பெருமானையே உபாயமாகக் கொள்ளுமவர் ஏகாங்கிகள். எம்பெருமானையே உபாயமாகப்பற்றி, ஐச்வர்யாதிகளை வேண்டாமல் அவனையே வேண்டும் அநந்யப்ரயோஜநர் பரமைகாந்திகள், இந்த ச்லோகத்தில் கூறப்பட்டவர்களோ வென்னில்; அவனிடத்தில் தமக்கு எதையும் அபேக்ஷியாமல் அவனுக்கே நன்மைகளை வேண்டுமவர்களாகையால் முற்கூறிய நால்வரைவிட மேம்பட்டவர்கள் என்று கருதத் தக்கவர்கள் என்பதைச் சிந்திக்க.

ப்ரஹ்மாதயஸ் ஸுரவராஸ்
ஸமஹர்ஷயஸ்தே
ஸந்தஸ் ஸனந்தன முகாஸ்த்வத
யோகிவர்யா: |
தாமாந்திகே தவ ஹி மங்கள
வஸ்து ஹஸ்தா:
ஸ்ரீவேங்கடாசலபதே தவ
ஸுப்ரபாதம் ||(27)

(ப) ஸமஹர்ஷய: = மகரிஷிக ளுடன் கூடிய, ப்ரஹ்மா ஆதய: ஸுரவரா: = பிரமன் முத லான உயர்ந்த தேவர்களும், அத து = மேலும், தே ஸந்த: = உனக்கு நல்லோர்களான, ஸநந் தன முகா: = ஸநந்தனர் முத லிய, யோகிவர்யா: = ஹி = உயர்ந்த யோகிளுமல்லவா, மங்களவஸ்து ஹஸ்தா: = மங் களப்பொருள்களைக் கையிலேந் தியவர்களாய், தவ = உனது, தாம அந்திகே = கோயிலின் அருகே, (ஸந்தி = இருக்கிறார்கள்) ஸ்ரீவேங்கடா - ஸுப்ரபாதம்.

(க) முனிவர்களும் தேவர்களும் யோகிகளும் உனக்குக் காணிக் கையாகச் செலுத்துவதற்காகக் கண்ணாடி விசிறி முதலிய மங் களப் பொருள்களைக் கையில் ஏந்திக்கொண்டு உன்கோயிலரு கில் வந்து நிற்கின்றனர். திரு வேங்கடநாதா! உனக்கிது நல் விடிவாகுக.

(வி) மகர்ஷிகளாவார் அத்ரி முதலிய ஸப்தரிஷிகள். இம்மு னிவர்களும் பிரமன் முதலிய தேவர்களும் ப்ரஹ்மபாவனை யும் கருமபாவனையும் உடைய வர்கள். ப்ரஹ்மபாவனை மட் டுமேயுள்ள ஸனந்தனாதியோகி யர் (அவ்விருவரைவிட) பகவா னுடைய அதிகமான அன்புக்கு இலக்கானவர்களாகையால் 'தே ஸந்த:' எனப்பட்டனர். ப்ரஹ் மபாவனை = ப்ரஹ்மத்யானம். கர்மபாவனை = கர்மானுஷ்டா னம். மங்களப்பொருள்களாவன - பூர்ண கும்பம் சாமரம் கண் ணாடி விசிறி தோட்டி முரசு விளக்கு கொடி முதலியனவாம்.

லக்ஷ்மீநிவாஸ நிரவத்ய
குணைகஸிந்தோ
ஸம்ஸாரஸாகர ஸமுத்தரணைக
ஸேதோ ।
வேதாந்த வேத்ய நிஜவைபவ
பக்த போக்ய
ஸ்ரீவேங்கடாசலபதே தவ
ஸுப்ரபாதம் ।। (28)

(ப) லக்ஷ்மீநிவாஸ = திரு மகள் வாழும் இடமானவனே, நிரவத்ய = குற்றமில்லாதவனே, குண ஏக ஸிந்தோ = குணங் களுக்கு ஒப்பற்ற கடலே, ஸம் ஸார ஸாகர ஸமுத்தரண ஏக ஸேதோ = ஸம்ஸாரமென் னும் கடலைத் தாண்டுவதற் குத் தனிப்பட்ட அணையே, பக்தபோக்ய = தொண்டர்க ளுக்கு இனியோனே, வேதாந்த வேத்ய நிஜவைபவ = உபநிஷத் துக்களால் அறியப்படும் இயற் கையான பெருமையை உடை யவனே, ஸ்ரீவேங்கடா-ஸுப்ரபா தம்.

(க) திருமகள் உறைவிட மென்றும் குற்றமற்றவனென் றும் குணக்கடலென்றும் ஸம் ஸாரக் கடலைக் கடத் தும் அணையென்றும் தன் னடியார்க்கு இனியவனென்றும் இங்ஙனம் பலவாறாக உபநிஷத் துக்களே ஓதும் பெருமை பெற்ற திருவேங்கடநாதனே உனக்கிது நல்விடிவாகுக.

(வி) லக்ஷ்மீநிவாஸ - பகவானு டைய ஸ்வரூபத்தைப் பிராட்டி தன் ஸ்வரூபத்தினால் ஆச்ர யித்திருக்குமாபோலே அவனது திருமேனியையும் தன் திருமே னியால் ஆச்ரயித்திருக்கிறாள். இவ்விஷயம் 'சாந்தானந்த' இத் யாதி சதுச்ச்லோகியின் நான் காம் ச்லோகத்தினால் கூறப்ப டுவது காணக.

'நிரவத்ய' 'குணைகஸிந்தோ' என்பதனால் ஹேயப்ரத்யநீகத் வமும் (குற்றங்கட்கு எதிர்த் தட்டாயிருக்கையும்) கல்யாணை கதாநத்வமும் (கல்யாண குணங் கட்கு பூர்ணஸ்தானமாயிருக் கையும்) முறையே கூறப்பட் டன. நிரவத்ய குணைக ஸிந்தோ என்பதனை ஒரே பதமாகக் கொண்டால் நிரவத்ய என்பது குணங்களுக்கு விசேஷ ணமாகி, குற்றமற்ற குணங்க ளுக்கு ஒப்பற்ற கடலே என்று பொருள்படும். வாத்ஸல்யாதி குணங்களுக்குக் குற்றமாவது - பகவானுடைய ஸ்வாதந்த்ர்யத் தால் அமுக்கப்படுகை, அஃதில் லாமையாவது - முன்பதத்தால் கூறப்பட்ட பிராட்டியின் புரு ஷகாரத்தாலே எம்பெருமானு டையதான - பாவியைத் தண் டித்தே தீருவேனென்னும் கேட் பாரற்ற ஸ்வாதந்த்ரியம் அமுக் குண்டு தான் (குணம்) தலையெ டுக்கை.

அவை தலையெடுத்தால், எம் பெருமான் ஆச்ரிதர்களுடைய குற்றங்களைப் போக்யமாகக் கொண்டு உபாயமாய் மோக்ஷந் தரும் தன்மையைச் சொல்லுகி றது மேலிற்பதம். மோக்ஷம் கொடுத்த பிறகு பக்தர்க ளுக்கு இனியனென்கிறது 'பக்த போக்ய' என்பது. இப்படிப் பட்ட பெருமைகளை நாம் அறி வது எது கொண்டென்னில் விடை பகர்கின்றது - 'வேதாந் தவேத்ய நிஜவைபவ' என்பது. வேதாந்தம் - உபநிஷத்து.

முதல்விளிக்கு ப்ரமாணம் - 'ஹ்ரீ: ச தே லக்ஷ்மீ: ச பத்ந்யௌ' (புருஷஸூக்தம்) பூமி தேவியும் லக்ஷ்மீ தேவியும் உனக்கு மனைவிமார்கள் என் பது. நிரவத்ய என்பதற்கு 'அபஹத பாப்மா விஜர: விம் ருத்யு:, விசோக: விஜிகத்ஸ: அபி பாஸ (ச்சாந்தோக்ய 8-7-1) பாப மில்லாதவன் கிழத்தனமில்லாத வன் மரணமில்லாதவன் துக்க

மில்லாதவன் பசியில்லாதவன் தாகமற்றவன் என்பது. குணை கஸிந்தோ என்பதற்கு 'ஸத்ய காம:' (சசாந்தோக்ய 8-7-1) நித்யமான கல்யாண குணங்கள் முதலியவற்றை உடையவன் - என்பதாகும். லக்ஷ்மீநிவாஸ நிரவத்யகுணைகஸிந்தோ என்பதற்கு ச்ரத்தயா தேவ: தேவத்யவம் அச்நுதே' (யஜு காட. 3,3) புருஷகாரம் செய்பவள் என்று நம்மால் நம்பப்படும் பிராட்டியால் எம்பெருமான் (குற்றமற்ற குணமுள்ளவனென்று) துதிக்கப்படுதலை அடைகிறான் என்பது ப்ரமாணம். ஸம்ஸாரேத்யாதிக்கு 'அம்ருதஸ்ய ஏஷ ஸேது:' (முண்டக 2-2-5) இவன் மோக்ஷத்தினைப் பெறுவிக்கும் அணையானவன் - என்பது ப்ரமாணம். பக்தபோக்ய என்பதற்கு 'ரஸோ வை ஸ:' அந்த ப்ரஹ்மம் அனுபவிக்கத்தக்க இனியதன்றோ என்பது ப்ரமாணம். பிறவும் இங்ஙனே காண்க.

இத்தம் வ்ருஷாசலபதேரிஹ
ஸுப்ரபாதம்
யேமாநவா: ப்ரதிதிநம் படிதும்
ப்ரவ்ருத்தா: ।
தேஷாம் ப்ரபாதஸமயே
ஸ்ம்ருதிரங்க பாஜாம்
ப்ரஜ்ஞாம் பரார்த்தஸுலபாம்
பரமாம் ப்ரஸூதே ।। (27)

(ப) இத்தம் = இவ்வாறு, வ்ருஷாசல பதே: = திருமலைநாதனுக்கு, ஸுப்ரபாதம் = நற்போது விடிதலைக் கூறும் ஸ்தோத்ரத்தை, இஹ= இத்திருமலையில், யே மாநவா: = எந்த மனிதர்கள், பிரதிதிநம் = தினந்தோறும், படிதும் ப்ரவ்ருத்தா: = சொல்ல இழிகின்றனர்களோ, தேஷாம் = அவர்களை, ப்ரபாத ஸமயே = காலைப்பொழுதில், ஸ்ம்ருதி: = நினைப்பது (ம்). அங்கபாஜாம் = உடலெடுத்த மனிதர்க்கு, பர அர்த்த ஸுலபாம் = பரமான பொருளை எளிதில் அடையத்தக்க, பரமாம் ப்ரஜ்ஞாம் = உயர்ந்த அறிவை, ப்ரஸூதே = பிறப்பிக்கின்றது.

(க) இவ்வாறாகத் திருமலை நாதனைத் துயிலுணர்த்திய ஸுப்ரபாத ஸ்தோத்ரத்தை யாவர் தினந்தோறும் திருமலையில் சொல்லுகிறார்களோ, அவர்களைக் காலைப்போதில் நினைத்தாலே போதும், அந்நினைவே அவர்களுக்கு பக்தியை உண்டாக்கி அவர்களைப் பரம் பொருளோடு சேர்ப்பிக்குமென்பதில் ஐயமில்லை.

(வி) திருமலைநாதனுடைய ஸுப்ரபாதத்தை யார் படிக்கிறார்களோ அம்மனிதர்கட்கு வெறுமனே படிப்பது மட்டுமல்லாமல் காலைவேளையில் திருமலைநாதனுடைய நினைவும் இருந்தால் அது மோக்ஷகாரணமான பக்தி ப்ரபத்திகளை உண்டாக்குமென்றும்,

யார் படிக்கிறார்களோ காலையில் அவர்களைப் பற்றிய நினைவு மனிதர்க்கு மோக்ஷகாரணமான பக்தியாதிகளை உண்டாக்குமென்றும்,

யார் படிக்கின்றார்களோ அவர்கள் காலையில் யாரை நினைக்கின்றார்களோ அந்நினைவு தனக்கு இலக்காகிய மனிதர்க்கு பக்தி முதலியவற்றை உண்டாக்குமென மூன்று வகைப் பொருள்கள் அருளிச் செய்வர். உத்தரோத்தரம் உத்க்ருஷ்டமாகும்.

**வேங்கடேச ஸுப்ரபாதம் முற்றிற்று.**



## கர்மா வகைகள்

வேதத்தை அனுசரித்து வரும் மக்களுக்கு பிரார்த்தனை இல்லாத கர்மாவே இல்லை. இதில் தினசரி கட்டாயமாகச் செய்ய வேண்டிய கர்மா; அதிகமாக செய்யவேண்டிய கர்மா என்ற இரண்டுவித கர்மாக்கள் உள்ளன. இவற்றை 'விவித கர்மா' என்றும், 'விசேஷ கர்மா' என்றும் அழைப்பர். இந்த வகைக்கர்மாக்களால்தான் பாவம், புண்ணியம் என்ற பலன்கள் ஏற்படும். எவனொருவன் நித்யகர்மா அல்லது விவித கர்மாவை (தினசரி செய்ய வேண்டிய கர்மாவை) ஒழுங்காக செய்கிறானோ அவனுக்கு பலன் 'புண்ணியமாக' கிடைக்கின்றது. விசேஷ கர்மாவாகிய அதிகமாக (தேவைகளை உத்திசித்து) செய்ய வேண்டிய கர்மாவை சரியாக நியம உருப்படி செய்யவில்லை என்றால் அவனுக்கு பலன் 'பாவமாகும்.' ஆக பாவத்தை சம்பாதிப்பதும் புண்ணியத்தை சேர்ப்பதும் அவரவர் செய்யும் கர்மாக்களேயன்றி வேறு ஒன்றுமில்லை. இதற்கு பரிகாரம் காயத்ரி மந்திரத்தை உபதேசிப்பது ஆகும்.

இந்த மந்திரம், சுகத்தை, போகத்தை, இச்சிப்பவர்களுக்கு சுபிக்ஷத்தைக் கொடுக்கும். பலனே விரும்பாமல் அனுஷ்டானம் செய்கிறவர்களுக்கு போக லோகங்களான பூர், புவர், சுவர்க லோகங்களைத் தாண்டி பரத்தைப் பிடிக்க வழிகாட்டும்.

திரு. N.C. கோபாலன் - சென்னை.

# ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாம மஹிமை

திரு. A.N. ராமகிருஷ்ணன் - குடியாத்தம்.

பிரம்ம ஸ்ரீசேங்காலிபுரம் ஸ்ரீஅனந்தராம தீக்ஷிதர் அவர்கள் ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாம பாராயணத்தின் மஹிமை பற்றி கூறி இருப்பதை பக்தகோடிகள் கடைபிடிக்க வேணுமாய் பிரார்த்திக்கின்றோம்.

ஸ்ரீபகவான் நாமங்களை ஜபித்தால் சகல பாபங்களும் விலகும் என்றும், ஸ்ரீபகவானை நமஸ்கரித்தால் துக்கம் வராமல் தடுக்குமென்றும் ஸ்ரீமத் பாகவதம் கூறுகிறது. வாஸுதேவனை ஸஹஸ்ரநாம பாராயணத்தினால் பூஜிப்பவர்களுக்கு துன்பமே கிடையாது என்று விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரம் கூறுகிறது.

"நவாஸுதேவ பக்தானாம் அசுபம்
வித்யதே க்வசித்"

தர்ம புத்திரர் சகல தர்மங்களையும் பீஷ்மரிடமிருந்து சிரவணம் செய்த பிறகு மறுபடியும் பீஷ்மரைப் பார்த்து, "கோதர்ம: ஸர்வ தர்மானாம் பவத: பரமோ மத:" "எல்லா தர்மங்களுள் எது மிகச் சிறந்த தர்மம்?" என்று குறிப்பாகக் கேட்டார். அதற்கு மஹாத்மாவான பீஷ்மர், விஷ்ணு ஸஹஸ்ரநாமத்தால் ஸ்ரீபகவானை துதிப்பது தான் சிறந்ததென்று தமக்குத் தோன்றுகிறது என்று பதிலளித்தார்.

"ஏஷமே ஸர்வ தர்மானாம்
தர்மோதிகதமோ மத:"

தாம் மோக்ஷத்தை அடையப் போகும் தருவாயில் ஸாக்ஷாத் ஸ்ரீகிருஷ்ணபகவானும் பல மஹரிஷிகளும், மன்னர்களும் கூடியிருந்த ஒரு ஸபையில் பீஷ்மரானவர் மேற்கண்டவாறு உபதேசித்தார் என்றால் விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரத்தின் மஹிமை மகத்தானது என்று நன்கு புலப்படும்.

ஸ்ரீஆதிசங்கர பகவத்பாதாள் ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாமத்துக்கு பாஷ்யம் செய்த வரலாறு மிகவும் ஆச்சரியகரமானது. ஸ்ரீசங்கரர், ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமச் சுவடியை எடுத்து வருமாறு தமது சிஷ்யனை ஏவினார். உள்ளே சென்ற சிஷ்யன் ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாமச் சுவடியை எடுத்து வந்தான். சிஷ்யனின் தவறை எடுத்துக் காட்டி ஸ்ரீசங்கரர் அவனை மறுபடியும் உள்ளே அனுப்பினார். சிஷ்யன் மறுபடியும் அதே சுவடியைக்கொண்டுவந்தான். சிஷ்யனிடம் சினங்கொண்டு மறுபடியும் அவனைத்திருப்பி அனுப்பியும், மூன்றுவது முறையும் விஷ்ணு ஸாஹஸ்ரநாம சுவடியையே அவன் எடுத்து வந்தான். உடனே ஸ்ரீசங்கரர் தமது சிஷ்யனைப் பார்த்து, "ஏன் இப்படிச் செய்கிறாய்?" என்று கேட்டதும், சிஷ்யன், "ஆசிரமத்துள் திவ்யாலங்கார புஷிதையான ஒரு அழகிய கன்னிகை இருக்கிறாள். அவள் மும்முறையும் வற்புறுத்தி ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாமத்தையே கொடுத்து அனுப்பினாள்" என்றான். உடனே ஸ்ரீசங்கரர் உள்ளே நுழைந்து பார்த்தபோது ஸாக்ஷாத் பராசக்தியான அம்பாள் நிற்பதைக்கண்டு ஆச்சர்யமடைந்து நமஸ்கரித்தார். தனது ஸகோதரரான ஸ்ரீமந் நாராயணனுடைய நாமாக்களுக்கு பாஷ்யம் எழுதப்படுவதில்தான் தனக்கு முழுத் திருப்தி என்று அம்பாள் ஸ்ரீசங்கரரிடம் கூறினாள். ஸ்ரீசங்கரர், முதல் முதலாக எழுதியபாஷ்யம் பிரம்மவித்யா பிரதமமான ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாமத்துக்கு அமைந்த வரலாறு இதுதான். ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ர நாம பாராயணத்தால் அம்பாளுக்கு திருப்தி ஏற்படுகிறது என்பது இவ்வரலாற்றின் மூலமாக நன்கு புலப்படுகிறது.

ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாம நாமாக்கள் மனிதனால் தொகுக்கப்பட்டதல்ல. இவை மகான்களான மகிரிஷிகளால் வேத மந்திரங்களிலிருந்து கண்டெடுக்கப்பட்ட நாமாக்கள். தேவர்கள்கூட இந்த நாமாக்களைத் தான் ஜபிக்கின்றனர். மிகுந்த சக்திவாய்ந்த இந்த நாமாக்களை ஜனங்களின் நன்மைக்காகத்தான் தாம் வெளியிடுவதாக பீஷ்மர் கூறுகிறார்.

"ரிஷிபி: பரிகீதாநி தாநி
வக்ஷ்யாமி பூதயே"

மகிரிஷிகளால் கையாளப்பட்டு, மிகுந்த க்ஷேமத்தைத் தந்து வந்த மந்திரம் என்பதால்தான் நமது பெரியோர்கள் வேறு ஸ்வயமாக அர்ச்சனை நாமாக்களைத் தொகுத்துக்கொள்ளாமல் ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாமத்தையே ஜபங்களி

லும் அர்ச்சனையிலும் பயன் படுத்திவந்தார்கள்.

பல கிராமங்களில் உள்ள பக்ஷிகள், எப்படி, ஒரு கிராமத்திலுள்ள பழுத்த பெரும் மரத்தை வந்தடைந்து பசி முதலிய தாபங்களைப் போக்கிக் கொள்கின்றனவோ, அதே போல மூவுலகத்தவருக்கும் ஸ்ரீமந் நாராயணன் பழுத்த மரம் போல் இருக்கிறார். "பூர்புவஸ்தரு" என்ற நாமாவுக்கு பராசரபட்டர் என்ற மஹான் இவ்வாறு வியாக்யானம் செய்திருக்கிறார். பால், தயிர் முதலியவற்றில் வெண்ணை இருப்பது போல் உலகிலுள்ள ஸகல வஸ்துக்களிலும் பகவான் அந்தர்யாமியாய் இருக்கிறார் என்பதை "தத்வம்" என்ற நாமாவளியை விளக்கிக்கூறுமிடத்தில் பராசர பட்டர் எடுத்துக்காட்டுகிறார். ஆகவே விஷ்ணு ஸஹஸ்ரநாம மஹிமையைக் கூறுமிடத்தில் ஸ்ரீஆதிசங்கரர் மஹாபாரதத்தில் உபதேசிக்கப்பட்டுள்ள ஸ்லோகம் ஒன்றை சுட்டிக்காட்டுகிறார். ஒரு ஜீவன் மோக்ஷம் அடைவதற்கு நான்கு வழிகளுண்டு. உயிர் உள்ள வரையில் பிரணவத்தை ஜபிப்பது ஒருவழி. யஜுர் வேதத்தில் அடங்கியுள்ள ஸ்ரீருத்ரத்தை ஜபிப்பது மற்றொரு வழி. காசி க்ஷேத்திரத்திலேயே போய் வசிப்பது மூன்றாவது வழி. இம்மூன்று வழிகளையும் பின்பற்ற முடியாதவரக்ளுக்கு நான்காவதோர் சுலபமான வழியை அந்த ஸ்லோகம் காட்டுகிறது. கலியினால் ஏற்படும் ஸகல பாபங்களையும் போக்கக்கூடிய ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாமத்தை லஜ்ஜையைவிட்டு பாராயணம் செய்தவதுதான் அந்த நான்காவது வழியாம். இது மோக்ஷ ஹேது என்பதால்தான் ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ர நாமமானது மஹாபாரதத்தில் மோக்ஷ தர்மம் என்ற பகுதியில் வெளியிடப்பட்டுள்ளது. ஆதலால்தான் ஸந்யாஸிகள் கூட பிரதி தினமும் ஒரு முறையாவது ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ர நாம பாராயணம் செய்ய வேண்டுமென்று விதிக்கப்பட்டிருக்கிறது.

ஸ்ரீசங்கரர ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாம பாராயணத்தை "ஜபயக்ஞம்" என்று கூறியிருக்கிறார். வேதோந்தமான ஸோம யாகங்களை செய்ய முடியாமல் ஏங்குவோருக்கு இது ஒரு யக்ஞமாகிறது என்று பராசர பட்டரும் கூறியிருக்கிறார். ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாம பாராயணத்திற்கு விசேஷமான நியமம் எதுவும் தேவையில்லை. ஸ்திரிகள் குழந்தைகள் உட்பட சகலரும் பாராயணம் செய்யலாம். பொதுப்படையாக யாவரும் அனுஷ்டிக்கக்கூடிய தர்மமாக இருப்பதால் பீஷ்மர் இதை மிகச் சிறந்த தர்மமாகக் கருதினார். பல்வேறு விதமான தெய்வங்களையும் பலவிதமான தர்மங்களையும் கண்டு நாம் எந்த வழிசெல்வது என்று திகைக்காமல் நிஸ்ஸந்தேகமாய் ஒரு வழியை பீஷ்மர் காட்டிய பிறகும் நாம் தயங்கலாகாது.

மோக்ஷ ஹேதுவான முயற்சிகள் அனைத்துமே இஹத்தில் சௌக்கியத்தைத் தந்து மனதைத் தெளிவாக்கி இறுதியில் முக்தியைத் தரும். இக லோக வஸதிகளை உறுதி செய்வதில் ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ர நாம ஸோத்திரம் நிகரற்றது. ஜ்வர நிவர்த்திக்கான மருந்துகளை ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ர நாமத்தினால் மந்திரித்து உட்கொள்ள வேண்டும் என்று சரக ஸம்ஹிதை எனப்படும் புராதன வைத்திய நூல் கூறுகிறது. தாய் - சேய் நலனை உத்தேசித்து பிரஸவ காலங்களில் ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ர நாம பாராயணம் நடத்துவது வழக்கம் என்பதை பாணர் என்ற கவியின் நூல்களிலிருந்து அறிகிறோம். வீடுகளிலும், கிராமங்களிலும் பேய் பிசாசுகளின் ஸஞ்சாரம் ஏற்படாமல் தடுக்க இந்த பாராயணம் உதவும் என்று மந்திர ஸாஸ்திரங்கள் கூறுகின்றன. திடகாத்திரம், தீர்க்காயுசு, அனாயாஸமான முடிவு இம்மூன்றையும் விரும்புவோருக்கு இந்த பாராயணம் மிகச்சிறந்தது ஆகும். நம்மை அண்டிப் பிழைப்பவர்களாலோ, வேறு விதமாகவோ நமக்கு தோல்வியோ, அவமானமோ நேரிடாமல் காத்துக் கொள்ள ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ர நாம பாராயணம் ஒன்றே கதி.

"பஜந்தியே புஷ்கராக்ஷம்
நதே யாந்தி பராபவம்"

பாராயணம் செய்பவர்களுக்கும், அவர்களுடைய இனத்தவர்களுக்கும் ஆங்கு ஆங்கு நல்ல செல்வாக்கும் கீர்த்தியும் உறுதியாகும்.

"யச: ப்ராப்னோதி விபுலம்யாதி
ப்ராதான்ய மேலச"

பண வசதி பெருகும்.

"அசலாம் ச்ரியமாப்னோதி"

ரோகங்கள் விலகும். முக்கியமாக, நிம்மதியான வாழ்க்கை நிலைக்கும். நிம்மதியைக் குலைக்கக்கூடிய பயம், கவலை எதுவும் நம்மை அணுகாமல் காக்கும்.

"ந பயம் க்வசித் ஆப்நோதி"

பக்தனை ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ர நாமம் கைவிடாது என்பதை சுட்டிக் காட்டும்

ரீதியில் "நரஸிம்ஹ வபு:" என்ற நாமா அமைந்திருக்கிறது. பகவானுடைய அவதாரங்களுள் பிரஹ்லாதனைக் காப்பாற்றிய அவதாரத்துக்கு ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாமத்தில் முதலிடம் தரப்பட்டுள்ளது. பக்தியின் அவசியத்தை இது காட்டுகிறது. நம்மிடம் பக்தி மட்டும் இருந்தால், ஹிரண்யகசிபுவை ஒடுக்கிய பிரபுவுக்கு நம்முடைய அல்பமான இடையூறுகளை அனைத்தும் போக்கடிப்பது ஒரு பெரிய காரியமாகாது. பகவான் எங்கும் இருக்கிறர். ஆதலால் நாம் ஸமஸ்தமான பேர்களிடம் அன்பு செலுத்தாவிடில் உண்மையான பக்தர்களாக மாட்டோம். இக்கருத்தை வற்புறுத்துவது போல் ஆரம்பத்திலேயே "விஸ்வம் விஷ்ணு:" என்ற நாமாக்கள் அமைந்துள்ளன. பரந்த நோக்கமும் பக்தியும் இல்லாவிடில் நாம் பகவானுடைய கோபத்துக்கு ஆளாவோம். ஹிரண்ய கசிபுவுக்கு ஒரு தூண் யமனாக முடிந்தது. பகவானுக்கு ஒரு துரும்பும்கூட ஆயுதமாகிவிடும்.

"ஸர்வப்ரஹரணயுத:" என்ற கடைசி நாமாவானது இதை எச்சரிப்பதுபோல் அமைந்துள்ளது. அணுகுண்டுவும், ரயில் விபத்துக்களும், பூகம்பங்களுக்கும், வெள்ளங்களும், அக்கிரமமான சட்டங்களும் பகவானுடைய ஆயுதங்கள் என்றும், பகவானுடைய கோபத்தின் அறிகுறிகள் என்றும் சொல்லலாம். ஆதலால் உண்மையான பக்தி அவசியம். பிரஹ்லாதனை கொடிய விஷத்தினின்றும் காப்பாற்றியது அவனுடைய பக்தி. "ஸ்ரத்தா, பக்தி ஸமன்வித:" என்பதன் மூலம் பக்தியின் அவசியம் வற்புறுத்தப்படுகிறது. "வஷட்கார:" என்று ஆரம்பித்து பல்வேறு நாமாக்கள மூலம் வேதோக்தமான யக்ஞங்களைச் சிறப்பித்துக் காட்டும் ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாமம் சாஸ்திரீயமானது என்பதை நினைவில் கொண்டு, கூடியவரை சாஸ்திரீயமான மனப்பான்மையை வளர்க்க வேண்டும். சாஸ்திரீயமான கார்யங்களை வெறுப்பவன் ஸஹஸ்ரநாமத்தை கௌரவித்தவன் ஆகமாட்டான். முக்கியமாக ஸந்தியா வந்தனத்தை யாவது யாவரும் அனுஷ்டித்தால்தான் பாராயணம் பலனைத்தரும். ஸந்தியா வந்தனமும் விஷ்ணு ஸஹஸ்ரநாமமும் இருக்கும் வரை வேறு துணை தேவையில்லை.

ஒற்றுமையும், அமைதியும், சுபீட்சமும் நிலவ வேண்டுமானால் எல்லோரும் பிரதிதினமும் கோஷ்டியாக பாராயணம் செய்வது தற்காலத்தில் முற்றிலும் அவசியமாகும்.

*********

## ஆர்ஜித சேவை விவரங்கள்

## தினசரி சேவைகள்

| சேவை | கட்டணத் தொகை ரூ. | அனுமதிக்கப் படும் நபர்கள் எண்ணிக்கை | அனுமதிக்கப் படும் நேரம் (மாறக்கூடியது) |
|---|---|---|---|
| 1. சுப்ரபாத தரிசனம் | 100/- | 1 | காலை 2-30 மணி |
| 2. தோமால சேவை | 200/- | 1 | காலை 3-30 மணி |
| 3. அர்ச்சனை | 200/- | 1 | காலை 4-30 மணி |
| 4. தோமால சேவை மற்றும் அர்ச்சனை (வெள்ளிக் கிழமைகளில்) | 400/- | 1 | காலை 6-30 மணி |
| 5. அமந்த்ரணோத்ஸவம் | | | |
| வெள்ளிக்கிழமைகளில் | 600/- | 1 | காலை 6-30 மணி |
| மற்றைய நாட்களில் | 600/- | 1 | காலை 3-30 மணி |
| 6. நிஜபாத தரிசனம் (வெள்ளிக்கிழமைதோறும்) | 100/- | 1 | காலை 5-30 மணி |
| 7. சிறப்பு நுழைவு சீட்டு | 30/- | 1 | சர்வ தரிசன அனுமதியின் போது |
| 8. ஏகாந்த சேவை | 100/- | 1 | இரவு 10-30 மணிக்குப்பிறகு |

குறிப்பு:-

1) வரிசை எண் 1 முதல் 6 வரை உள்ள சேவைகளுக்கு 90 நாட்களுக்கு முன்பேயே முன்பதிவு செய்துகொள்ளலாம்.
2) சிறப்பு நுழைவு மற்றும் ஏகாந்த சேவை சீட்டுக்களுக்கு முன்பதிவு கிடையாது.
3) ஏகாந்த சேவைகளுக்கான சீட்டுகள் ஸர்வ தரிசனத்திற்குப் பிறகு இரவு 10-30 மணிக்குமேல், ஒதுக்கப்படும் சீட்டுக்களைப் பொறுத்து விற்கப்படும்.

# இன்புற்று வாழ்க

வித்வான். வி. சுப்ரமண்யன் - உடுமலைபேட்டை.



'விஷ்ணுமயம் ஜகத்து' என்பது வேத வாக்கு. விஷ்ணு என்ற சொல்லுக்கு எங்கும் பரவியிருப்பது என்பது பொருள். ஸர்வ வியாபி ஸ்ரீமஹாவிஷ்ணுவானதால் விஷ்ணு மயம் ஜகத்து என்றனர்.

யச்ச கிஞ்சிஜ் ஜகத் ஸர்வம்
த்ருஸ்யதே ஸ்ருயதே அபிவா ।
அந்தர்பஹிஸ்ச தத்ஸர்வம்
வ்யாப்ய நாராயண:

யாதொன்று உலக முழுவதிலும் காணப்படுகிறதோ அல்லது கேட்கப்படுகின்றதோ அவ்வனைத்தையும் உள்ளும் வெளியும் வியாபித்துக் கொண்டு நாராயணன் இருக்கின்றார். நாராயண ஸூக்தம் இதனை உறுதிப்படுத்துகிறது. நாம் காணும் பொருளெல்லாம் விஷ்ணு சொரூபம் தான். அதனால்தான் ஹிரண்ய கசிபு, கம்சன் முதலிய அசுரர்களுக்குக் காணும் இடமெல்லாம், பொருள் எல்லாம் ஹரி நாராயண சொரூபமாகவே காட்சியளித்தன. விஷ்ணு, திருமால், ஹரி, நாராயணன் முதலிய பல பெயர்களும் ஒரு பரம்பொருளையே குறிப்பனவாகும்.

திருமாலின் நிலையை ஐந்தாகக் கூறுவர். பரமபத நிலையை ஸ்ரீவைகுண்டம் என்பர். திருப்பாற் கடலில் அரிதுயில் நிலையை வியூகம் என்பர். அரிதுயில் யோக நித்திரை என்றும் கூறப்படும். அறிந்தும் அறியாதவர் போல் உறங்குதல். இதற்கு விளக்கமாக ஸ்ரீகிருஷ்ணபகவான் மஹாபாரத யுத்தத்திற்காக உதவி கேட்க வந்த துரியோதனனை பாராமலும், அர்ச்சுனன் வந்து நிற்பதை அறிந்தும் உறக்கத்தினின்றும் கண்விழித்துப்பார்ப்பதைப் போல் அர்ச்சுனனைப் பார்த்தும் பிறகு துரியோதனனையும் பார்த்தார் என்னுமிடத்து ஸ்ரீகிருஷ்ண பகவானுடைய அரிதுயிலை நாம் அறியலாம். மூன்றாவதாக பகவான் ஸ்ரீமந் நாராயணன் பல அவதாரங்களையெடுத்து இவ்வுலகில் தோன்றுவது விபவம் எனப்படும். நான்காவது அந்தர்யாமித்வம் ஆகும். ஐந்தாவது யோகிகளின் உள்ளத்திலும் பக்தர் முதலியவர்களின் மனத்திலும் மறைந்திருக்கும் நிலையாகும். இவ்வுலகில் அர்ச்சாவ

தார மூர்த்தியாக எழுந்தருளிப் பல தலங்களில காட்சியளிப பது ஐந்தாவது நிலையாகும். கருணைமூர்த்தியான ஸ்ரீமந்நாரா யணன் இவ்வுலகின் ஜீவர்களை எளிமையாகக் கண்டு உய யவேண்டி ஐந்தாவதுநிலையில எளிமையாகக் காட்சியளிக்கிறார். ஆங்காங்குள்ள மக்கள் தேடிய லையாமல் சுலபமாகத் தரிச னம் செய்ய பாரதத்தின் பல தலங்களில் கோயில் கொண்டுள் ளார். தமிழகத்தில் ஆழ்வார்கள் தோன்றி தெய்வ சாந்நித்யம் விளங்க மங்களாசாஸனம் செய் துள்ளனர். கோவில் களில் எம்பெருமானைக் கண்டவுடன் அவனே- அந்தவைகுண்டாதி பதியான ஸ்ரீமந்நாராயணனே இவன் என்ற நினைப்பு மேலிட வணங்கவேண்டும். ஆழ்வார்க ளிலே ஒருவரான நம்மாழ்வார் கோவிலில் பெருமாளைக் கண்டு நினைந்து வணங்க வேண்டுவ தைப் பற்றிக் கூறியுள்ளார்.

விஷ்ணுவையே வணங்குபவர் கள் வைஷ்ணவர் ஆவர். ஆதி சங்கரர் ஸ்தாபித்த மதங்களில் ஒன்று வைணவம் ஆகும். அவ ருக்குப் பின் வந்த ஸ்ரீராமா னுஜர் முதலிய ஆசார்யர்க ளால் வைணவம் தனித்த சமய மாகி வலுப்பெற்றது. வைண வத்தில் பஞ்ச ஸம்ஸ்காரம் என்ற சடங்கு முக்கியமா னது. இதனை ஆசார்யனைக் கொண்டோ ஆசார்யன் மூல மாகவோ செய்து கொள்ள வேண்டும். நெற்றி முதலிய இடங்களில் உடம்பில் முத்தி ரைக் குத்திக்கொள்ள வேண் டும். இதனால் பஞ்ச ஸம்ஸ் காரம் செய்து கொண்டவர் கள் ஐயங்கார் எனப்பட்டனர். பஞ்ச - ஐந்து. ஸம்ஸ்கார் - சுபச் சடங்குகள். 'ஸம்ஸ்கார்' என்ற சொல்லின் ஈற்றிலுள்ள கார்யம் என்னும் பொருள்படும் 'கார்' என்னும் சொல் ஐந்து என்னும் சொல்லுடன் சேர்ந்து ஐயங்கார் என்றாயிற்று. இது ஐந்து+கார=ஐயங்கார் என வந் தது. வைணவத்தில பாஞ் சராத்ரம், வைகானசம என்ற இரண்டு பிரிவுகள உண்டு. திரு மால ஐந்து இரவு காலங்க ளில் பக்தனுக்கு அருள புரிந் தது பஞ்சராத்ரமாகும். விக னன் என்ற முனிவர சொன்ன மந்த்ர மார்க்கம் வைகானஸம் ஆகும். விகனன்-விகனஸர என னும் சொல்லுவர். அந்த வழி யைப் பின்பற்றுபவர் வைகா னஸர் ஆவர். எவரெவர் எந்த வழியைப் பின்பற்றினா லும் முடிவாக வருவது திரு மாலைச் சரணமடைவதான பிர பக்தி மார்க்கமான சரணாகதி தத் துவமேயாகும். திருமாலைச் சர ணமடைவது அஃறிணை, உயர் திணை ஆகிய எல்லாவுயிர்கட் கும் பொதுவானதும் சாத்திய மானதும் ஆகும். இதனை இராமாயணத்தின் மூலம் நன்கு உணரலாம். பிரபக்தி மார்க்கமா கிய சரணாகதி தத்துவ நூலே இராமாயணமாகும்.

இரண்டாயிரம் ஆண்டுக ளுக்கு முந்திய சங்க இலக் கியங்களில் திருமால் வழிபாடு காணப்படுகிறது. வேதங்களில் ஸ்ரீமஹாவிஷ்ணு போற்றப்படுகி றார். புருஷ ஸூக்தம் நாராயண ஸூக்தம் முதலியன விஷ்ணு வைப் போற்றித்துதிக்கின்றன. ஆகையால் வேதகாலம் முதற் கொண்டே திருமால் வழிபாடு உண்டு என்று அறியலாம். வேதகாலம் என்பது மனித இனம் தோன்றி அறிவாலு ணர்ந்து இறைவனைத் துதிக் கத்தோன்றிய காலமே ஆகும். அஃதாவது சரித்திர ஆராய்ச் சிக்கும் எட்டாத மிக மிகத் தொன்மையான காலமேயாகும். அதனால்தான் இந்து மதத்தின் இரண்டு கண்கள் என சைவமும் வைணவமும் விளங்கி வருகி றது. ஸர்வலோக நாதனாகிய ஸ்ரீமஹாவிஷ்ணு புருஷ ஸூக் தத்தின ஆதியில கூறியுள்ள உருவம் பெரிதினும பெரிது. பல ஆயிரக்கணக்கான தலை களும் கண்களும் கால்களும் உள்ளவனாகப் பரம புருஷன் காட்சியளிக்கிறான். எல்லோரு டைய தலைகளும் கால்களும் அவனுடையவனவே. அப்பரமபு ருஷன் பூமியையும் ஆகாயத்தை யும் வியாபித்து எங்கும் நிறைந் துள்ளான.

பூ:பாதௌயஸ்ய நாபிர்
வியதஸு்ரநிலஸ்
சந்த்ர ஸூர்யௌச நேத்ரே
கர்ணாவாஸா ஸிரோதயௌர்
முகமபி தஹனோ
யஸ்ய வாஸ்தேய மப்தி: ।
அந்தஸ்தம் யஸ்ய விஸ்வம்
ஸு்ரநரககோ
போகி கந்தர்வதைத்யை:
சித்ரம் ரம்ரம்யதேதம் த்ரிபுவனவபுஷம்
விஷ்ணுமீசம் ந மாமி ।

பூமியே பாதமாகும். சூரிய சந்த்ரர் இரண்டு கண்களா கும். வானம் நாபியாக வும், வாயு பிராணனாகவும், திசைகள் காதுகளாகவும், தேவ லோகம் தலையாகவும், அக்னி வாயாகவும், சமுத்திரம் வயிறா கவும் அமைந்துள்ளன. அவ ருடைய வயிற்றில் எல்லா ஜீவராசிகளும் இயங்குகின்றன. எனவே மூவுலகவடிவினராகிய விஷ்ணுவை வணங்குகிறேன்.

இக்கருத்துக்கள் அடங்கிய சங்கத்தமிழ்ப் பாடல்,

மாநிலம் சேவடியாகத் தூநீர்
வளைநரல் பௌவம் உடுக்கையாக
விசும்புமெய்யாக திசைகையாகப்
பசுங்கதிர் மதியமொடு சுடர்
கண்ணாக
வியன்றவெல்லாம் பயின்றகத்தடக்கிய
வேதமுதல்வன் என்ப
தீதற விளங்கிய திகிரியோனே

இப்பாடல்களில் திருமாலின் பேருருவம் காட்டப்பட்டுள்ளது. நாராயண ஸூக்தத்தில் சிறிதி னும் சிறிதாகக் கூறப்படுகிறது. ஒவ்வொருவருடைய இருதயத் துள்ளும் சின்னஞ்சிறு வடிவத் தில் புருஷோத்தமன் பிரகாசிக்கி

ளுன். அந்த ஒளியில பொனனி றம், செந்தீயின சிவபபு நிறம். நீலநிறம் தோற்றுகிறதெனறும அதனால அவனே பிருமமா, அவனே சிவன், அவனே ஹரி, அவனே அனைத்தும் என்றும அறிந்துகொளகிறோம்.

நீலதோ யத மத்யஸ்தாத் வித்யுல்லே
கேவ பாஸ்வரா ।
நீவார சூகவத் தன்வீ பீதா
பாஸ்வத் யணூபமா
தஸ்யா: சிகாய மத்யே பரமாத்மா
வ்யவஸ்திதி: ।
ஸ ப்ரஹ்ம ஸ சிவ: ஸ ஹரி:
ஸேந்த்ரஸோக்ஷர: பரம: ஸ்வராட்

திருமங்கையாழ்வார்,

"ஒருருவம் பொன்னுருவம் ஒன்று
செந்தீ ஒன்றுமாகடலுருவம்
மூவுருவம் கண்டபோது
ஒன்றுஞ்சோதி"

என்றருளியது ஈண்டு நோக்கத் தக்கதே.

இவ்வுண்மையை உணரத் தவே திருமூலர் திருமந்திரத்தில்,

உடம்பினை முன்னம்
இழுக்கென்றிருந்தேன்
உடம்பினுக்குள்ளேயுறுபொருள்
கண்டேன்
உடம்புள்ளே உத்தமன் கோயில்
கொண்டானென்று
உடம்பினையானிருந்து
ஓம்புகின்றேனே"

என்ருர். அந்தப் பரமபுருஷ னாகிய விஷ்ணுவின் மகிமை அளவிலடங்காதது. பூமியில் உள்ள தூசுகளை எண்ணினா லும் எண்ணலாம். ஆனால் அப்பரமபுருஷனுடைய பெரு மையைக் கணக்கிடமுடியாது. மூன்று உலகங்களையும் மூன்று அடியால் அளந்தவரும் மஹான் களால் கீர்த்தனம் செய்யப்படுப வரும் ஆகிய மஹாவிஷ்ணுவின் வீரியச் செயல்களைப் போற்றி வணங்குவதால் நாடும் வீடும் நலம் பெறுவதை சூடிக்கொ டுத்த சுடர்க்கொடி ஆண்டாள், ஓங்கி உலகளந்த உத்தமன் பேர்பாடி

நாங்கள நமபாவைக்குச் சாற்றி
நீராடினால்
தீங்கின்றி நாடெல்லாம் திங்கள்
மும்மாரி பெய்து
ஓங்கு பெருஞ்செந்நெல்
ஊடுகயல்உகள
பூங்குவளைப்போதில் பொறிவண்டு
கண்படுப்பத்
தேங்காதே புக்கிருந்து
சீர்த்தமுலை பற்றி
வாங்கக் குடம் நிறைக்கும் வள்ளல்
பெரும்பசுக்கள்
நீங்காத செல்வம் நிறைந்தேலோர்
எம்பாவாய்

என்றருளியுள்ளார். இப்படியாக ஸ்ரீமஹாவிஷ்ணுவைப் போற் றித் துதிப்பதால் ஸ்ரீலக்ஷ்மி தேவியின் திருவருளால் ஆயுள் ஆரோக்யம் தான்யம் தனம் பசுக்கள் வம்சாபிவிருத்தி முத லியன உண்டாகும்.

தானயம தனம பசும
பஹுபுத்ரலாபம்
சதஸம்வக்ஸரம் தீர்க்கமாயு: ।

எனபது வேதவாக்கு. நாரா யண நாமத்தை ஜபிப்பவர் களுக்கு நல்ல குலமாக்கும். வாழ்க்கைக்கு வேண்டிய செல் வத்தைத் தரும். அடியார் கள் படும் துயரத்தையெல் லாம் அழித்துவிடும். பரமப தமாகிய ஸ்ரீவைகுண்ட பத வியை ஆத்மாவுக்கு அளித்து விடும். பெற்ற தாய் செய் வதைவிட பலமடங்கு நன் மையைத்தரும். ஆதலால் நன்மையையே தரும் நாரா யண என்னும் நாமத்தையே நாராயணனையே நான் கண்டு கொண்டேன் என்று உறுதிப் படக்கூறுகிருர் திருமங்கையாழ் வார். நாராயண நாமம் நரர் களுக்கு (மனிதர்களுக்கு) நல்ல துணையாகும். வழிநடத்துவ தாகும். நாமத்தை ஜபிப்பவர் உள்ளத்தைக் கவர்ந்து விடுகி ருன் நாராயணன். அவர் அறியாமலே அவருடைய உள் ளத்தைக் கவர்ந்து விடு வதால் பக்தர்களின் உள ளத்தை எடுத்துக்கொளவதால் அவனைத் திருடன் என்கின் ருர் கவி. திருடர்கள்தான் திரு டிய பொருளை மற்றவரிடம் விற்றுவிடுவர். ஆனால் நாரா யணனாகிய திருடனோ தான் கவர்ந்த மனதைத் தானே வைத் துக்கொண்டு, அவர்கள் பல பிறவிகளில் செய்த பாவமூட் டைகளையும் எடுத்துக்கொண்டு விடுகிருன். அதனால் கவி ஞன், நாராயணனை 'ப்ரஸித்த சௌர:' உலகமறிந்த திருடன், புகழ்வாய்ந்த பெரிய திருடன் என்ருன். அதனால் அவன் தரும் நலம் பரமபதநிலையா கும்.

நாராயணேநாம நரோ நராணும்
ப்ரஸித்த சௌர: கதித: ப்ரதிவ்யாம்
அனேக ஜன்மார்ஜித பாப சஞ்சயம்
ஹரித் யரிஷ்டாந் ஸ்ருதமாத்ரமேவ

ஹரியின் குணங்களைப் பாடி னால் வைகுண்டத்திற்குச் செல் லலாம் என்று எளிமை யான வழியைச் சுருக்கமாகக் கபீர்தாஸர் "ஹரிகுண கானா, வைகுண்ட ஜானா" என்றருளி யுள்ளார்.

இவ்வுலகில் துனபுற்று ஏங் கிச் செய்வதறியாது மனந்த ளர்ந்தவர்களும், அச்சங்கொண் டவர்களும், கொடிய நோய் களால் பீடிக்கப்பட்டவர்களும் 'நாராயண' என்னும் சொல்லை எப்போதும் சொல்லிப்புகழ்ந்து பாடி துக்கத்தினின்றும் விடு பட்டு இன்புற்று வாழ்வார்க ளாக.

ஆர்த்தாவிஷண்ணு சிதிலாஸ்சபீதா
கோரேஷுச வ்யாதிஷு
வர்த்தமானா: ।
ஸங்கீர்த்ய நாராயண ஸப்தமாத்ரம்
விமுக்ததுக்கா: ஸுகினோ
பவந்து.



ஒவ்வொரு ஆலயத்திலும் ஒரு "விருட்சம்" முக்கிய இடம் பெறும். சிவாலயத்தில் வில்வ விருட்சம் இருக்கும். விஷ்ணு ஆலயங்களில் துளசிச் செடியிருக்கும். பீடம் (அ) மாடம் கட்டி அதில் வளர்க்கும் முறை. சக்தி ஆலயங்களில் வேப்ப விருட்சம் இருக்கும். கணபதி ஆலயங்களில அருகம்புல் இருக்கும் (வளர்ப்பார்கள்). பிரமனுக்கு ஆலயங்கள் அரிது. ஆனால் அவ்வாலய விருட்சம் அத்திமரம். ஒவ்வொரு விருட்சத்தின் இலைகள், சமூலங்கள் யாவற்றிலும் ஓர் சக்தி உள்ளது. அச்சக்திகளை நாம் தெரிந்து பயன் பெறுவது மிக மிக நலமாகும். இப்போது மேற்கண்ட தெய்வீக விருட்சங்களில், வேப்ப மரத்தின் சிறப்பு பற்றி ஆராய்வோம்.



ளது என்பதை நாம் யாவரும அறிந்த உண்மையே!

வேம்பில் "நிலவேம்பு" "மலை வேம்பு", "சிவனார் வேம்பு" என்ற

வீட்டு முகப்பிலும் சுற்றிலும் பங்களாக்களிலும் மரம் வைத்து பாதுகாக்கின்றனர்.

நம் வீட்டில் யாருக்காவது

# வேம்பு ஒரு வரம்

டாக்டர் கே. பாலசுப்பிரமணியன் - கள்ளக்குறிச்சி.

## வேம்பு (அ) வேப்பிலை

அக்காலத்தில் ஆலய விருட்ச மூலிகைகளை அர்ச்சனைக்கும், மக்களுக்கு ப்ரசாதமாகவும் வழங்கி அதனை பயபக்தியுடன் புசித்து, சுவைத்து, அதனால் அரிய பெரிய நோய்கள் எல்லாம் தடை செய்தும் அறவே தீர்ந்தும் உள்ளன. பொதுவாக அக்காலங்களில் ஆஸ்பத்திரி அதிகம் கிடையாது. அந்த அளவுக்கு நோயும் இல்லை. இப்போது நாகரீக காலம் என்ற ஒன்று வீரநடைபோட்டு வந்து மக்களை அளவுக்கு மீறிய செயல்களுக்கு உட்படுத்தி எங்கும், எதிலும், எப்போதும் நோய் என்ற நிலை விஸ்வரூபம் எடுத்துள்

வகைகள் உள்ளன. ஆனால் நிலவேம்பு மகத்தானது. அதன் பயன்களைப் பார்ப்போம்.

வேப்பிலையை ஆதிசக்தி மூலிகை என்றும், பராசக்தி மூலிகை என்றும், ஓம் சக்தி மாரியம்மாள் மூலிகை என்றும், ஓம் சக்தியே! என்றும் நம் நாட்டு மக்கள் கூறி வருகின்றனர். ஆனால் இம்மூலிகை ஒரு மாபெரும் சக்திவாய்ந்த மூலிகையாகும். இத்துடன் தெய்வீக அருள்சக்தியும் இரண்டறக் கலந்துள்ளது என்பது தெள்ளத்தெளிவாகும்.

வேப்ப மரக்காற்றுல், பரவும் நோய்க் கிருமிகள் அழிக்கப்படுகின்றன. அதனால் சிலர்

அம்மை வார்க்கப்பட்டிருந்தால் வீட்டின் முகப்புக் கூரையில் வேப்பிலைக் கொத்துக்களைச் சொருகி வைப்பர். படுக்கையிலும் சுற்றிலும் வைக்கப்படுகிறது. இது மற்றவர்களுக்கு எச்சரிக்கப்படுகிறது. இம்மூலிகை ஒரு கிருமி நாசினியாகும். தொற்றுநோய்களை விரட்டி அடிக்கும் சக்தி வாய்ந்தது.

## ஒரு விசேஷ குணம்

வேப்பிலைக் கொழுந்தினைப் பறித்துத் தினம் அதிகாலை வெறும் வயிற்றில் 5 (அ) 6 கிராம் அளவுக்கு மென்று சாப்பிட்டு வந்தால் ஒரு மண்டலம் (48 நாட்கள்) இரண்டு

மண்டலம் சாப்பிட்டால் நம் வாழ்க்கையில் எந்தவித நோயும் தொடராது. இது உண்மை. சமீபத்தில் ஒரு மருத்துவ இதழில் மேற்கண்ட முறையில் ஒருவர் சாப்பிட்டுள்ளார். ஒரு கருநாகம் அவரை கடித்து விட்டுச் சென்றது. சற்றுதூரம் சென்றதும் அந்த கருநாகம் இறந்து விட்டது (தானாக). கடி பட்டவர் கடிபடாத அளவுக்கு நலமாகவே உள்ளார். இது எவ்வளவு ஆச்சரியம் பாருங்கள். அம்மை, சுரம், விஷசுரம், சொறி, சிரங்கு, தொழுநோய், நாள்பட்ட வேறு விஷக்கடிகள் குணமாகும்.

## முன் எச்சரிக்கை

வேப்பமர இலைகள் திடீரென்று வெளுக்க ஆரம்பித்தால் அது, அந்த எல்லையில் (அ) கிராமத்தில் விஷக்காற்றாலும், துர்நாற்றத்தாலும் அம்மை, காலரா போன்ற வியாதிகள் பரவும் என்பதை முன்னெச்செரிக்கையாக நமக்கு எடுத்துரைக்கும்.

## மருத்துவப் பயனைப் பார்ப்போம்

1. "பொன்னுக்கு வீங்கி" அதாவது புட்டாளம்மை என்பார்கள். இதனால் கன்னம், கழுத்து வீங்கிவிடும். இதைப் பொன்னுக்கு வீங்கி என்றும் கூறுவர். இதற்குத் தங்கத்தினாலான (பொன்) மாங்கல்யம், நாணல் (அ) குண்டு ஏதேனும் ஒன்றை மஞ்சள் கயிற்றில் கோர்த்துக் கழுத்தில் கட்டுவார்கள். மேலும் வேப்பிலையும் மஞ்சளையும் சேர்த்து அரைத்துப் பற்றுப்போடுவார்கள். இதனால் விரைந்து சுகம் ஏற்படும் (தங்கம், வேப்பிலை, மஞ்சள் ஆகியனவற்றில் ஒரு சக்தி உள்ளது.)

2. பித்த வெடிப்பு, நகச்சுற்றுக்கும் வேப்பிலையை சிறிது மஞ்சளுடன் அரைத்துப்பூசி வந்தால் விரைந்து சுகம் ஏற்படும்.

3. குழந்தைகளுக்கு மாந்தம், சளிக்கு வேப்பிலைக் கொழுந்து சிறிதும் 3 மிளகு, 5 சீரகம் சேர்த்து அரைத்து வெந்நீரில் கலக்கி ஒரு பாலாடை போட்டால் கபமும், சளியும் குறையும் (அ) வெளிப்படும்.

## வேப்பம் பூ

இதன் பலன் கூடுமானவரை எல்லோருக்கும் தெரியும். அதாவது பித்தத்தினால் ஏற்படும் குமட்டல், மயக்கம், தலைசுற்றல், வாந்தி, நாக்கு ருசியின்மை, பெரு ஏப்பம், குடற் பூச்சிகள் போன்ற நோய்களைப் பூரணமாக நிவர்த்தி செய்யலாம்.

பெரும்பாலோர் எல்லா மாநிலத்திலும் புத்தாண்டு தினத்தன்று வேப்பம் பூவுடன் (புதிய பூ) புளி, மாங்காய், வெல்லம் சேர்த்துச் சிறிது தண்ணீர் கூட்டி முதலில் சாப்பிடுவார்கள். மேலும் சாம்பார் ரசம் போன்றவைகளிலும் கலப்பார்கள்.

மற்றும் இதை ரசமாகவும், பொடியாகவும், துவையலாகவும், பச்சடியாகவும் பயன்படுத்துவது சாலச்சிறந்ததாகும். வாரம் ஒருமுறை குடும்பத்தில் அனைவரும் மேற்கண்டவைகளை உபயோகித்து வந்தால் நோய் அணுகாது, திடகாத்திரமாகவும் நீண்ட ஆயுளுடனும் வாழலாம்.

பழைய உலர்ந்த வேப்பம் பூவை சுத்தம் செய்து நெய் (அ) நல்லெண்ணெய் விட்டுப் பொன் (இளம்) வறுவலாக வறுத்து அதனுடன் துவரம் பருப்பும் பயத்தம் பருப்பும் பொன் வறுவலாக வறுத்துக் கொண்டு சிறிது பொரித்த பெருங்காயம், பத்து மிளகு, சிறிது சீரகம், சிறிது சுக்கு, தகுந்த உப்பு கலந்து (கருவேப்பிலை வறுத்தது) உரலில் நன்றாக இடித்துப் பொடியாக்கி ஒரு பாட்டலில் அடைத்து வைத்துக்கொண்டு (கைபடாமல் காற்று போகாமல்) இரவு சாப்பிடும் போது சுடு சாதத்தில் இரண்டு டீஸ்பூன் வேப்பம்பூ பொடியைக் கலந்து (நெய் விட்டு) பிசைந்து சாப்பிட்டு வந்தால் (குடும்பத்தில் உள்ள அனைவரும்) திட ஆரோக்கியம், பசி, மந்தம், வாய்வு, மயக்கம், பித்தம், ஏப்பம் மற்றும் அநேக வியாதிகளிலிருந்து (வயிறு சம்பந்தப்பட்ட) பூரண சுகம் ஏற்படும். ஆஸ்பத்திரிக்குச் செல்லும் நிலை இருக்காது.

## வேப்பங்காய்

இதனைக் கொட்டை நீக்கிக் காய வைத்து இடித்துப் பொடி செய்து 10 அரிசி எடை அளவு தினமும் மூன்று வேளை மூன்று நாளைக்குச் சாப்பிட்டால் சுரம், தலைவலி, மண்டைக்குத்து வலி ஆகியன நீங்கும்.

## வேப்பம் பழம்

வேப்பம்பழக் கொட்டையை எடுத்து உடைத்துப் பருப்பை எடுத்து அரைத்து புரையோடிய புண், இரணங்களுக்கு வைத்துக் கட்டினால் குணம் ஏற்படும்.

## வேப்ப எண்ணெய்

இது மிக மிக முக்கியமான உயிர் காக்கும் மருந்தாகும். ஒவ்வொரு வீட்டிலும் ஒரு பாட்டல் வேப்ப எண்ணெய் அவ

சியம் வைத்திருப்பது நல்லது.
இது மனிதனுக்கு மட்டும் அல்ல
ஆடு, மாடு முதலிய பிராணி
களுக்கும் பயன்படும் ஔடதம்.
ஆபத்துக்குப் பயன்படும் கல
பம் இந்த எண்ணெய்.

குழந்தைகளுக்கு ஏற்படும்
மாந்தம், தெற்கத்திக்கணை என்
னும் இசிவு நோய், பெரியவர்க
ளுக்கும் ஏற்படும் வலிப்பு நோய்,
கை நடுக்கம் போன்ற நரம்பு
சம்பந்தப்பட்ட நோய்கள் தீர
இது ஒரு வரப்பிரசாதமாகும்.

செய்முறை :- உலர்ந்த வேப்பங்
கொட்டைகளை நசுக்கி எண்
ணையை எடுக்கவேண்டும்.
தேவையான அளவுக்கு வேப்ப
எண்ணெயை ஒரு பாத்திரத்
தில் (சுத்தமான பாத்திரத்
தில்) ஊற்றிக்கொண்டு, எரி
யும் அடுப்பில் இரும்புக் கரண்
டிக் காம்பை மட்டும் நன்
ருக காயவைத்துப் பின் பாத்
திரத்தில் உள்ள எண்ணையில்
சொருகி, முறித்து அதை வய
துக்கு தகுந்த மாதிரி உள்ளுக்
கும் (குழந்தைகளுக்கு வியா
திக்கேற்றபடி சொட்டு முறை
யிலும் பெரியவர்களுக்கு ஒரு
டீஸ்பூன் மூன்று வேளைக்கு
உள்ளுக்கும்) கொடுத்த பின்
திரேகத்திலும் பாதிக்கப்பட்ட
இடத்திலும் தேய்க்க வேண்
டும். உடம்பு ஜில்லிட்டுவிட்
டால் பாதத்திலும் மற்ற முக்
கிய இடத்திலும் இந்த எண்
ணெயைத் தேய்த்தால் உடனே
உடம்பு பூராவும் சூடேறி விடும்.
விஷக்கடிகளுக்கும் பயன்படும்.
மற்றும் பாரிச வாயு, வாத
வலிகளுக்கும் தேய்க்கலாம். எல்
லாவித ஜன்னிக்கும் இந்த எண்
ணெயை உபயோகிக்கலாம்.

**சொறி**, சிரங்கு, இரணம்,
**கரப்பான்** கிரந்தி நோய்களுக்
கும் மேல் பூசசார. செயய
லாம. விரைந்து பலன ஏற்
படும். மேலும வேபபம்
படடையை உலரத்திப் பொடி
செய்து பத்து அரிசி எடை
அளவு எடுத்து பசுமபாலில
கலந்து சாப்பிட்டு வந்தால
(தினம் இரண்டு வேளை ஆறு
நாளைக்கு) உடல பலப் படும்.
மலக்கட்டு, மூலசூடு, வயிற
றுப் பூச்சி, சூளை வயிற்று
வலி அனைத்தும் நீங்கும.

மலை வேம்பு :- கர்ப்பாசய
நோயான மலடு நீங்கும். ஒடு
வாய்வு, அரிக்கும் கிருமிகள,
ரத்த, பித்த குன்மம் தீரும்.
(இலையைச் சாறு பிழிந்து
உண்ணல்.)

சிவனார் வேம்பு :- குஷ்டம்,
மேகக் கிரந்தி, சர்ப்பங்களின்
விஷம், இரணங்கள், பிளவை
கள் யாவும் நீங்கும்.

சில சமயம் மிகுந்த முற்றிய
வேப்ப மரத்தில் பால் வடி
யும். அங்குள்ள மக்கள் உடன்
திரண்டு அம்மரத்திற்கு மஞ்சள்
பூசி குங்குமத்திலகமிட்டு, மஞ்
சள் பாவாடை சாற்றி, மலர்
சுற்றி, பய பக்தியுடன் வழி
பாடு செய்து அப்பாலை அருந்
துவார்கள். சிலர் கைப்படாமல்
பாட்டிலில் சேமித்து அடைத்து
வீட்டில் ஆச்சாரத்துடன் பூசை
அறையில் வைத்து ' தேவைக்
கேற்ப உபயோகிப்பார்கள். இத
னால் பெருநோய், மகோதரம்,
(வீக்கம்) பெரும்பாடு, மதுமேகம்
(நீரிழிவு) வெள்ளை (இருபாலர்க
ளுக்கும்) மலக்கிருமிகள் போகும்.
அவ்வளவு சக்தி வாய்ந்தது.
இதை சிலர் "வேப்பங்கள்" என்
றும் கூறுவர்.

ஒருசிலர் வீட்டின் முகப்பு
(அ) தோட்டத்தில் உள்ள வேப்ப
மரத்திற்கு (அடியில்) நீரால் சுத்
தம் செய்து பாலாபிஷேகம்
செய்து மஞ்சள் பூசி, குங்குமத்
திலகமிட்டு, மஞ்சள கயிறு
இட்டு நறுமண மலர் மாலை
சாற்றிப் பயபக்தியுடன கேழ்வ
ரகுக் கூழ், கம்பு கூழ், சாதம்,
இனிப்புப் பொங்கல் படை
யல்கள் ஒவ்வொரு வெள்ளிக்
கிழமையும, செவ்வாய்கிழமை
யும, ஆடிப்பூரம் ஆடி வெள்
ளியிலும், தூபதீபமேற்றி ஆரா
தனை செய்து வழிபட்டு வேப்
பிலையையும் விபூதியையும்
கலந்து ப்ரசாதமாக உண்டு
மகிழ்கின்றார்கள்.

மேற்கண்டபடி உள்ளவர்களை
பல இடங்களில் நேரில்
பார்த்து இருக்கின்றேன். அதன்
பலனையும் கேட்டும், பார்த்தும்
உள்ளேன். இந்த வழிபாட்டால்
குடும்ப ஒற்றுமை, இல்லற இன்
பம், சிறந்த செல்வம் சேருதல்,
நோயற்ற, திடகாத்திர உடலு
டன் வாழ்வு, கல்வி, குழந்
தைப்பேறு முதலியன நம்மை
அடைந்து நாம் பெருவாழ்வு
வாழ உதவியாக உள்ளது.

வேப்ப மரம் சமூகம் ஒரு தெய்
வீக மூலிகையாகும் .

குறிப்பு :- மருந்தாட் கொள்ளு
வதில் புரியவில்லை, சந்தேகம்
என்றால் அருகிலுள்ள சித்த
வைத்தியரை அணுகிக் கேட்பது
நல்லது.



(தொடர் கட்டுரை)

# ஸஹஸ்ர நாமம்

## நம்மாழ்வார் விளக்கம்

திரு. T.S. இராஜகோபாலன் - சென்னை



வைகுண்ட: புருஷ: ப்ராண:
ப்ராணத: ப்ரணம: ப்ரது: ।
ஹிரண்யகர்ப்ப: சத்ருக்நோ
வ்யாப்தோ வாயு ரதோக்ஷஜ: ।। 44 ।।

**406. வைகுண்ட:** - அன்பர் தன்னை அடைவதற்கான இடையூறுகளைப் போக்கித் தன்னிடம் சேர்த்துகொள்வோன்.

நீர்ந்த அடியவர் தம்மைத் திருத்திப்
பணிகொள்ளவல்ல, ஆர்ந்தபுகழ்
அச்சுதனை (3-6-11)

[பணிகொள்ள ஸ்ரீவைகுண்டத்தில்.]

407. புருஷ: பரிசுத்தன்.

..மாயப் பிரானைத் தூய அமுதைப் பருகிப் பருகி (1-7-3)

408. ப்ராண: யாவர்க்கும் உயிரானவன்.

என்விளக்கை, என் ஆவியை (1-7-5)

409. ப்ராணத: உயிரளிப்பவன்; அடியார்களை உய்யச்செய்பவன்.

எனக்கு ஆராவமுதமாய், எனதாவியை
இன்னுயிரை (10-10-6)

410. ப்ரணம: தனது கல்யாண குணங்களாலே யாவரும் தன்னை வணங்கும்படி செய்பவன்.

எல்லையில் சீர் என் கருமணிக்கச் சுடரை
நல்ல அமுதம் (2-5-9)

411. ப்ரது: பெருங் கீர்த்தி வாய்ந்தவன்.

பேரெயில் சூழ்கடல் தென்னிலங்கை செற்ற
பிரான் (7-3-7)

[பிரான்: கீர்த்தி குறிப்பு]

### 14.2 'தியானத்திற்கு ஏற்றவன்

412. ஹிரண்ய கர்ப்ப: சிறந்த யோகிகளின் உள்ளத்தில் பொன்போல் உறைபவன்.

கண்ணுள் நின்று அகலான்,
கருத்தின்கண் பெரியன் (10-8-8)

413. சத்ருக்ந: - சிற்றின்பங்களாகிய விரோதங்களை (இவர்களுக்கு) அழிப்பவன்.

என்னைக்கொண்டு, என் பாவந் தன்னையும்
பாறக் கைத்து (2-7-4)

[பாறக் கைத்து - பற்றுமாறு செய்து.]

414. வ்யாப்த: - தரம் பாராமல் வாத்ஸல்யம் வாய்ந்திருப்பதால் எல்லாரிடத்திலும் உறைபவன்.

415. வாயு: - தனது அன்பர்கள் இருக்குமிடம் நாடி நடந்து செல்வோன்.

ஞாலத்தூடே நடந்து.... உயிர்கள் காப்பானே!
(6-9-3)

416. அதோக்ஷஜ: - கீழுலகிலும் தனது பெருமை சிறிதும் மாறாமல் அவதரிப்பவன்; தன்னை எவ்வளவு அனுபவித்தாலும், இன்பம் வற்றாதவாறு விளங்குவோன்.

யானும் ஏத்தி... தானும் ஏத்திலும், தன்னை
ஏத்த ஏத்த எங்கெய்தும்? (4-3-10)

[பெருமானை நானும் ஏத்தி, வாலறிவனான தானும் ஏத்தி, எங்கு எய்தும்? ஏத்துதல் முடிவுறாது என்பது கருத்து.]

ருது: ஸுதர்சந: கால:
பரமேஷ்டீ பரிக்ரஹ: ।
உக்ர: ஸம்வத்ஸரோ தக்ஷோ
விச்ராமோ விச்வ தக்ஷிண: ।। 45 ।।

417. ருது: - அவ்வப்போது புதியனவாகத் தோன்றும் கல்யாண குணங்கள் வாய்ந்தவன்.

எப்பொழுதும் நாள், திங்கள்,
ஆண்டூழி ஊழிதோறும்
அப்பொழுதைக்கப்பொழுது என் ஆராவமுதமே. (2-5-4)

418. ஸுதர்சந: - அழகிய திருமேனி வாய்ந்தவன்.

எண்ணம் புகுந்து தித்திக்கும் அமுதே! (6-10-5)

419. கால: - இந்தக் கல்யாண குணங்களால் யாவரையும் தன்னிடம் சேர்த்துக் கொள்பவன்.

இசைவித்து என்னை உன்தாளிணைக் கீழ்
இருத்தும் அம்மானே! (5-9-9)

420. பரமேஷ்டீ - ராவணனைக் கொன்று அயோத்தியில் அரசாண்டு, பின்பு பரமபதம் சேர்ந்து விளங்குவோன்.

அரக்கன் குலத்தைத் தடிந்து, ஆண்டு, தன்
சோதிபுக்க அமரர் அரியேற்றினையே (7-6-9)

421. பரிக்ரஹ: - அன்பர் தன்னிடம் சேரும்படி ஏற்றுக்கொள்பவன். (ராமாவதாரத்தில் சராசரங்களைத் தன்னிடம் ஏற்றுக்கொண்டவன்.)

நாட்டை அளித்து, உய்யச் செய்து நடந்தமை
கேட்டுமே (7-5-2)

[அளித்து-தன்னை அனுபவிக்கச்செய்து, நடந்தமை-தன்னுடன் அழைத்துச் சென்றமை]

## 15. கல்கி

[தீயோரைத் தண்டிப்பதற்காகக் கலகியாகப் பாதாளத்தில் உறைகின்ற நிலை.]

422. உக்ர: - தீயோர்களைக் கலியுகத்தின் முடிவில் அழிப்பதற்காகக் கோபத்துடன் விளங்குவோன்.

கற்கியாம் இன்னம் கார்வண்ணனே (5-1-10)

423. ஸம்வத்ஸர: - இவ்வாறு அழிப்பதற்காக உரிய காலத்தை எதிர்பார்த்துக்கொண்டு பாதாளத்தில் இருப்பதவன் (ஆதிசேஷன் மேல் கல்கியாக)

424. தக்ஷ: - கொடியோரை அழிப்பதில் ஆற்றல் மிக்கவன்.

(பொதுவாக) குலங்குலமா அசுரர்களை நீறெழும்படியாக,
நிருமித்துப் படைதொட்ட-மாறனன் (4-8-1)

425. விச்ராம: - பாவத்தின் பலனை அனுபவித்து இளைத்தவர்கள் களைப்பாறுமிடம்.

பாவ நாசனைப் பங்கயக் கண்ணனைப்
பரவுமினோ (3-6-2)

[பாவம் நீங்கிப் பரவுவது குறிப்பு]

426. விச்வதக்ஷிண: - தனது ஆணைப்படி நடந்தாலும் மீறினாலும் யாவரிடமும் தாக்ஷிண்யமும் உடையவன்.

பரிவதில் ஈசனைப்பாடி (1-6-1)

[பரிவதுஇல்-பக்ஷபாதம் காட்டாமல். அன்றி, பரிவதுஇல்: பரிவதே இயல்பாக உடைய]

(தொடரும்)



# வையம் வியக்கும் வைகாசி

காச்யபன்

வைகாசி மாதம் வசந்த ருதுவாகையாலே எங்கும் புஷ்பங்கள் பூத்து அழகாயிருக்கும். இம்மாதத்தில் வேதம் தமிழ் செய்த மாறன் எனனும் நம்மாழ்வாரும், அவரதம் அருள் பெற்ற திருககோட்டியூர்நம்பி, திருவரங்கப்பெருமாள அரையர், பெரிய திருமலைநம்பி, பிள்ளை திருமலைநம்பி, பராசரபட்டர், வேதவியாசபட்டர மற்றும் திருவாய்மொழிப்பிள்ளையும் அவதரித்த நாட்குறிப்பு சுருக்கமாகச் சொல்லப்படுகிறது.

## திருக்கோட்டியூர்நம்பி (17-5-96)

ஸ்ரீபுண்டரீகர் என்னும் நித்ய சூரியன் அம்சமாய்த் திருக்கோட்டியூரில் வைகாசி ரோகிணியில் அவதரித்தவர் திருக்கோட்டியூர்நம்பியாவர். இவரது இயற்பெயர் திருக்குருகைப்பிரான். இராமாநுசரைச் சீடராகப் பெற்று, 18 தடவை தம்மிடம் நடக்கச் செய்து இரகசியப் பொருள்களை உபதேசம் செய்தவர்.

## பெரிய திருமலை நம்பி (30-5-96)

இவ்வாசாரியர் திருமலையில் சுமுகர் என்னும் நித்யசூரி அம்சமாய் வைகாசி ஸ்வாதியில் அவதரித்தவர். திருவேங்கடமுடையானால் 'திருத் தமப்பனார்' என அபிமானிக்கப்பட்டவர். மலையப்பனுக்குத் திருமஞ்சன தீர்த்தம் கொண்டுவரும் கைங்கர்யம் செய்து வந்தவர். தன் மருமகனான ஸ்ரீகோவிந்த பட்டரைத் திருத்தி ஸ்ரீவைஷ்ணவனாக ஆக்கியவர. திருப்பதியில ஸ்ரீராமாநுசருககு இராமாயணத்தின் ஆழ்பொருளை உபதேசித்தவர.

## நம்மாழ்வார் (31-5-96)

கலி பிறந்து 43வது நாளில் வைகாசி விசாகத்தில் திருக்குருகூரில் சேனை முதலியாரின் அம்சமாய் அவதரித்தவர். தொண்டர்க்கு அமுதமான திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி ஆகிய நான்கு பிரபந்தங்களை அருளியவர். ஸ்ரீமன் நாதமுனிகளுக்கு நாலாயிர திவ்ய ப்ரபந்தத்தை அருளியவர். நன்மதுரகவி வணங்கும் நாவீறனாவர். வேதம் தமிழ் செய்த மாறன் என்றும், சடகோபன் என்றும் சிறப்புப்பெயர் பெற்றவர். ஆழ்வார்கள் அனைவருக்கும் அவயவியாவர்.

## பிள்ளை திருமலைநம்பி (31-5-96)

பெரிய திருமலைநம்பியின் திருக்குமாரரான இவர் வைகாசி விசாகத்தில் அவதரித்தவர். இராமாநுசரிடம் ஆச்ரயித்தவர்.

## திருவாய்மொழிப்பிள்ளை (31-5-96)

திருமலையாழ்வார் என்கிற திருவாய்மொழிப்பிள்ளை குந்தீ நகரத்தில் வைகாசி விசாகத்தில் அவதரித்தவர். பிள்ளை லோகாசார்யரின் முக்கிய சீடராவர். உயர்ந்த குணங்களுக்கு இருப்பிடமான இவர் எம்பெருமானார் திருவடிகளே தஞ்சம் என்றிருப்பவர். மணவாளமாமுனிகள் இவர்தம் முக்கிய சீடராவர். நம்பிள்ளை செப்புநெறியான ஈடு என்னும் முப்பத்தாருயிரப்படியை மாமுனிகளுக்கு சாதித்து அருளினவர்.

## பராசர பட்டர் (1-6-96)

வைகாசி அனுஷத்தில் அவதரித்த இவர், ஸ்ரீரங்கநாதனின் புரோகிதரான கூரத்தாழ்வானின் திருக்குமாரராவர். எம்பாரின் சீடராவர். வேதாந்தியான நஞ்சீயர் இவர்தம் சீடராவர். தென்னரங்கர் மைந்தன் எனச் சிறப்பு பெற்றவர். திருவாய்மொழியில் பட்டர் நிர்வாகம் சிறப்புடைத்து.

---

"மாதுரக்ரே விஜநநம் த்விதியம் மௌஞ்ஜீபந்தனாத் ।
ப்ராஹ்மண - க்ஷத்ரிய - விசஸ் - தஸ்மாதேதே
த்விஜா: ஸம்ருதா ।।

தாயிடம் முதல் பிறப்பும், உபநயனத்தின்போது மௌஞ்ஜி பந்தனத்தால் இரண்டாவது பிறப்பும் பிராம்மண, க்ஷத்ரிய, வைசியர்களுக்கு ஏற்படுவதால் அவர்கள் த்விஜர்கள் அல்லது இரு பிறப்பாளர்கள் எனப்படுவர்.

திரு. N.C. கோபாலன் - சென்னை.

**வேத வியாசபட்டர்** (1-6-96)

வியாசரின் அம்சராய வைகாசி அனுஷத்தில் கூரத்தாழ்வானின் திருக்குமரராய அவதரித்த இவர் இயற்பெயர சீராமப்பிள்ளை. எம்பார் திருவடிகளில் ஆச்ரயித்தவர்.

**திருவரங்கப்பெருமாள் அரையர்** (2-6-96)

நாதமுனிகள் குலம் திகழ, ஆளவந்தாரின் சிறந்த குமாரராக சங்குகர்ணர் என்னும் நித்யசூரி அம்சமாய் வைகாசி கேட்டையில் ஸ்ரீரங்கத்தில் அவதரித்தவர். ஆசார்யர் மணக்கால் நம்பி. சீடர் எம்பெருமானார். ஸ்ரீரங்கநாதனுக்கு அரையராய் இருந்த இவர் ஒரு சமயம் திருமலைக்கு வந்து 'ஒழிவில் காலமெல்லாம் ஒழிவில் காலமெல்லாம்' என்று நம்மாழ்வார் பாடலில் ஈடுபட்டு திருமலையப்பனை அநுபவித்தவர்.

இவ்வாறு இம்மாதம ஆழ்வார் ஆசார்யர்கள் அவதரித்த பெருமைமட்டுமின்றி, வைகாசி ஸ்வாதியில் (30-5-96) அழகிய சிங்கர் ஸந்தியாகாலத்தில் தூணில் தோன்றி காட்சி அளித்த பெருமையும் அத்தத்தின் பத்தாவது நாளான வைகாசி திருவோணத்தில் தீர்த்தவாரி கண்டருளும காஞ்சீ தேவப்பெருமாள் பிரம்மோற்சவத்தில் வையம் வியக்கும் கருட சேவையின் (31-5-96) பெருமையும், வைகாசி அனுஷத்தில் தீர்த்தவாரி கண்டருளும் திருப்பதி ஸ்ரீகோவிந்தராஜ ஸ்வாமியின் பிரம்மோற்சவத்தின் (24-5-96 to 1-6-96) பெருமையும் முப்புரியூட்டும் வகையில் ஒருசேர அமையப் பெற்று பக்தர்களைப் பரவசப்படுத்தும் மாதமுமாகும். ❋

(தொடர் கட்டுரை)

# பகவத் கீதை

பதினோராம் அத்தியாயம்

## விஸ்வரூப தர்சன யோகம்

உமைப்ரியன்



பகவான் கூறுவது:

காலோஅஸ்மி லோகக்ஷயக்ருத்
ப்ரவ்ருத்தோ
லோகன் ஸமாஹர்துமிஹ
ப்ரவ்ருத்த: ||
ருதேஅபி த்வாம் ந பவிஷ்யந்தி
ஸர்வே
யே அவஸ்திதா: ப்ரத்யனீகேஷு
யோதா: || (32)

"உலகங்கள் எல்லாவற்றையும் அழித்திடும் ஆற்றல்பெற்ற காலதேவன் நான். இந்த உலகம் யாவற்றையும் அழிப்பதில் ஈடுபட்டிருக்கின்றேன். போர் முனையிலிருந்து நீ விலக நினைத்தாலும் போரிட அணி வகுத்து நிற்கும் எல்லா வீரர்களும் உயிருடன் இருக்கமாட்டார்கள்."

[இச்செய்யுளில் காலத்தின் ஆற்றல், பெருமை பேசப் பெறுகிறது. ஆகாயம் எனும் ஒரு பூதத்தில் எவ்வாறு காற்று, நீர், நெருப்பு, மண் என்ற மற்றைய பூதங்கள் அடங்கி விடுகின்றனவோ அவ்வாறே காலம் எனும் பெரும் ஆற்றலில் மற்றைய வாழ்க்கைச் செயல்கள் ஒடுங்கிவிடுகின்றன. ஆம், மனித ஆற்றலின் அளவாக காலம் செயல்படுகின்றது. அவ்வாறு அளப்பவன் அக்கால தேவனான இறைவனாவான். பூமி பாரத்தைக் குறைக்கவே இறைவன் அவதாரம் மேற்கொள்கிறுன். பூகம்பமும், வெள்ளமும் அவன் திருவிளையாடல்களே. அந்த வகையில்தான் பாரதப்போரும் இறைவனால் நிகழ்த்தப்பெறுகின்றது. இப்போரில் பங்கேற்க அர்ச்சுனன் விரும்பாவிட்டாலும், இறை விருப்பத்தால் இப்போர் நடக்கின்றது. இந்த நிலையில்தான் தனது உறவினர்களின் மரணம் தன்னால் அன்று இறைவனால்தான் என்ற ஓர் உண்மையை அர்ச்சுனன் அறிய ஆரம்பிக்கின்ருன்.]

தஸ்மாத் த்வமுத்திஷ்ட யசோ
லபஸ்வ
ஜித்வா சத்ரூன் புங்க்ஷ்வ
ராஜ்யம் ஸம்ருத்தம் |
மயைவைதே நிஹதா: பூர்வமேவ
நிமித்தமாத்ரம் பவ
ஸவ்யஸாசின் || (33)

"ஆகவே, நீ எழுவாயாக! புகழைப் பெறுவாயாக! பகைவர்

களை அழித்து செல்வம் மிக்க இந்த நாட்டை ஆண்டு அனுப விப்பாயாக! இவர்கள் யாவரும் (இப்போரில் கொல்லப்படுபவர்கள் யாவரும்) என்னால் முன்னமேயே கொல்லப்பட்டவர்கள் தாம். இடது கை கொண்டும் அம்பு எய்தும் வல்லமை பெற்ற வீரனே! நீ ஒரு கருவியாக மட்டும் செயல்படுவாயாக."

[எல்லாச் செயல்களும் இறைவனின் விருப்பத்தால்தான் நடக்கும். அச்செயல்பாடுகளில் ஒழுங்கும், தர்மமும், உறுதியும் எப்போதும் விளங்கிடும். அவ்வாறு இறைவனால் முடிவெடுக்கப்பட்டு அவனால் நடத்தப்படும் செயல்களுக்கு உறு துணையாக இருப்பதுதான் மனிதனின் கடமை. அதுவே அவனுக்குப் பெருமையும், புகழையும் வழங்கிடும். இறைவனது அவதார குறிக்கோள் தீயோரை அழித்து நல்லோரை அழித்துத் தர்மத்தை காப்பதுதான். அந்த வகையில் பகைவர்ளை அழித்திடும் இறை முயற்சியில் மனிதனும் பங்கேற்ற வேண்டும். அதுவே உலகாயுத இன்பங்களுக்கும் மேலுலக பயன்களுக்கும் இறுதியில் மோட்சத்தையும் மனிதனுக்கு தரவல்லது. அர்ச்சுனன் போன்ற தேர்ந்த வீரன் தன்னுடைய ஆற்றலை நல்லவற்றிற்கு, நீதிக்கு பயன் படுத்திக் கொள்வதே வீரத்திற்கு சிறப்பு. இவ்வீரம் இறைவனின் விருப்பத்திற்கு ஒரு கருவியாகவே துணை செய்கின்றது.]

த்ரோணம் ச பீஷ்மம் ச
ஜயத்ரதம் ச
கர்ணம் ததான்யானபி யோத
வீரான் ।
மயா ஹதான் ஸ்த்வம் ஜஹி
மா வ்யதிஷ்டா
யுத்யஸ்வ ஜேதாஸி ரணே
ஸபத்னான்: ।। (34)

"என்னால (முன்பே) கொலை செய்யப்பட்ட துரோணரையும் பீஷ்மரையும், ஜயத்ரதனையும், கர்ணனையும் அதுபோன்று மற்றைய படைவீரர்களையும் என் கருவியாகத் திகழ்ந்து கொல்வாயாக! பயந்து மன வருத்தம் கொள்ளாதே. போரில் பகைவர்களை அழிப்பாயாக. போ, போர்புரிவாயாக!"

[மேற் செய்யுளில் கூறப்பட்ட நபர்களான துரோணர், பீஷ்மர், ஜயத்ரதன், கர்ணன் ஆகியோர் பலவகைகளில் மற்றைய வீரர்களிடமிருந்து வேறுபட்டு, தங்களுக்கென்ற தனி ஆற்றல் உடையவர்களாவர். துரோணர் அர்ச்சுனனுக்கு குருமட்டுமின்றி, பல தெய்வாம்சம் மிக்க அம்புகளை பெற்றிருப்பவர். பீஷ்மரோ இது வரை யாராலும் வெல்லப்படாதவர். மேலும் அவர் விரும்பினாரன்றி அவர்க்கு இறப்பு இல்லை. ஜயத்ரதனின் தலையை யார் அறுத்து நிலத்தில் வீழ்த்துகிறாரோ, அவர்கள் தலை உருத்தெரியாமல் வெடித்துவிடும். கர்ணனை கலச குண்டலமும், ஆற்றல் மிக்க 'சக்தி' என்ற போர்க்கருவியும் பாதுகாக்கின்றன. இவ்வாறு ஆற்றல்மிக்க அவர்களைத் தன்னால் அழிக்கமுடியுமா என்ற அச்சமும், ஐயமும், அர்ச்சுனனை பீடிக்கின்றது. அதைத் துடைத்திடும் வகையில் பகவான் அர்ச்சுனனுக்கு தைர்யமளித்து கையில் வில்லெடுக்கச் செய்கின்றார்.]

ஏதச்ச்ருத்வா வசனம் கேசவஸ்ய
க்ருதாஞ்ஜலிர் வேபமான:
கிரீடீ ।
நமஸ்க்ருத்வா பூய ஏவாஹ
க்ருஷ்ணம்
ஸகத்கதம் பீதபீத:
ப்ரணம்ய ।। (35)

"கேசவனுடைய (பகவானுடைய) இந்த உபதேச வார்த்தைகளைக் கேட்டதும், தலையில் கிரீடம் (பொன் முடி) தரித்தவனாகிய அர்ச்சுனன் பயந்து, நடுநடுங்கி கைகளைக் கூப்பியவனாய் (பகவானை) வணங்கி, மறுபடியும் (பகவானாகிய) கிருஷ்ணனைப் பார்த்து வார்த்தைகள் தடுமாற கூற ஆரம்பிக்கின்றான்."

[யாருக்கும் தலைவணங்கக் கூடாத, பயப்படக் கூடாத மிடுக்குடன் பேசவேண்டிய அரசனான அர்ச்சுனன் இங்கு பகவானிடம் ஒரு அடிமை நிலையில் விளங்குவது, ஜீவாத்மாக்கள் பரமாத்மாவிடம் ஒடுங்க வேண்டிய அவசியத்தைக் குறிக்கவே ஆகும்.]

## அர்ச்சுனன் சொன்னது

ஸ்தானே ஹ்ருஷீகேச தவ
ப்ரகீர்த்யா
ஜகத் ப்ரஹ்ருஷ்யத்
யனுரஜ்யதே ச ।
ரக்ஷாம்ஸி பீதானி திசோ
த்ரவந்தி
ஸர்வே நமஸ்யந்தி ச
ஸித்தஸங்கா: ।। (36)

"ஹ்ருஷிகேசனே! உன்னைப் புகழ்வதால் இந்த உலகம் இன்பம் அடைகின்றது. (உன்னைக் கண்டு) அரக்கர்கள் திசை தெரியாமல் அஞ்சி ஓடுகிறார்கள். சித்தர் போன்ற ஞானிகள் உன்னைக் கண்டு வணங்குகின்றனர். இவையாவும் உன் ஆற்றலுக்கும், பெருமைக்கும் பொருத்தமானதாகத் திகழ்கின்றன."

[சுமார் 60, 70 ஆண்டுகளுக்கு முன்பு இரயிலைப் பார்த்ததும் கிராமத்தார் பயந்தனர். அதனைக் கண்டு அஞ்சி ஓடவும் செய்தனர். அதனைப் போன்று, இறைவனின் இயற்கை விநோதங்களைக் கண்டு அரக்கர்கள் அஞ்சி ஓடுவர். இரயிலின் நன்மையை, ஆற்றலை உணர்ந்த கிராமத்தார் பின்னர் புகழவும், பயன் பெறவும் செய்தனர். அதனைப்போன்று, இறை ஆற்றலை உணர்ந்த பக்தர்கள் அப்பகவானை புகழ்வதும், புகழ் பாடுவதும் மேற்கொள்வார்கள். அவ் இறைவனை உணரும் அளவு, அவன் ஆற்றல்களை அனுபவிக்கும் அளவு பக்தர்கள் சித்தர்களாக உயர்வு பெறுவார்கள். அந்த வகையில் ஒரு சாதாரண போர்வீரன் அரசன் - க்ஷத்திரியன் என்ற நிலையில் இருந்த அர்ச்சுனன், இறைவனின் அமுத மொழிகளை கேட்ட அளவு, அவற்றைப் புரிந்து கொண்ட அளவு - அவனுடைய அறிவு விரிவடைகின்றது. அந்த நிலையில் தான் ஒரு கருவிமட்டுமே - தனக்குரிய கடமையை ஆற்றுவதே தனக்குப் பெருமை சேர்க்கும் என்ற எண்ணம் அவனுக்கு ஏற்படுகிறது.]

கஸ்மாச்ச தே ந நமேரன் மஹாத்மன்
கரீயஸே ப்ரஹ்மணோ அப்யாதி கர்த்ரே ।
அனந்த தேவேச ஜகந்நிவாஸ
த்வமக்ஷரம் ஸதஸத்தத்பரம் யத் ।। (37)

"மகாத்மாவே! முடிவில்லாது விளங்குபவரே! தேவர்களின் தலைவரே! உலகத்தையே இருப்பிடமாகக் கொண்டவரே, பிரம்மனுக்கும் பெரியவரே! மூலகாரணரே, உங்களை எவ்வாறு வணங்காமல் இருப்பார்கள்? (வணங்கத்தான் செய்வார்கள்) தோன்றியன தோன்றாமல் இருப்பன ஆகியவற்றிற்கு அப்பாற்பட்டு விளங்கிடும் அழியாத பொருளுமாக இருப்பவரே"

[இச்செய்யுளில் இறைவனின் பேராற்றல் மறுபடியும் உணர்த்தப்படுகிறது. ஆரம்பமும், முடிவும் இல்லாதவனாக, இவ்வுலக உயிர்களுக்கு மட்டுமன்றி, தேவர்கள் யாவருக்கும் தலைவனாக, உலகைப்படைத்திட்ட அந்த பிரம்மனுக்கும் பெரியவனாக, கண்ணுக்குத் தெரியவதும், தெரியாததுமாக விளங்கிடும் பொருள்களுக்கு அப்பாற்பட்டவனாக, அழிவு அல்லது குறைவுபடாத பொருளாக இருப்பவனாக இறைவன் திகழ்கின்றான். ]

த்வமாதிதேவ: புருஷ: புராணஸ்த்வ-மஸ்ய
விச்வஸ்ய் பரம் நிதானம் ।
வேத்தாஸி வேத்யம் ச பரம் ச தாம
த்வயா ததம் .விச்வமனந்த ரூப ।। (38)

"கணக்கற்ற உருவங்களைக் கொண்டவனே, முதற்பொருளே, மிகப் பழமையானவனாயும், இந்த உலகங்கள் யாவற்றிற்கும் மேற்பட்ட இடத்தில் இருப்பவனாயும் விளங்குபவர் தாங்களே யாவீர்! அறிபவனும், அறியப்படும் பொருளும், பெரிய நிலமாயும் விளங்குகிறீர்! உங்களால் இந்த உலகம் யாவும் நிறைந்துள்ளது."

[இறைவன் மிகவும் பழமையானவன் என்பதால் 'புராண புருஷன்' எனப்புகழப்பெறுகிறான். எல்லா உயிர்களும் அவனிடமிருந்து தோன்றுவதால், அவன் ஆதிநாயகன். அறிவாகவும், அறியப்படும் பொருளாகவும் இறைவன் விளங்குகின்றான். கடலாக, வெளியாக அவன் திகழ்வதால் எல்லா தோற்றங்களும் அவனுள் அடங்கும்.]

வாயுர்யமோ அக்னிர்வருண: சசாங்க:
ப்ரஜாபதிஸ்த்வம் ப்ரபிதா மஹஸ்ச ।
நமோ நமஸ்தே அஸ்து ஸஹஸ்ரக்ருத்வ:
புனஸ்ச பூயோ அபி நமோ நமஸ்தே ।। (39)

"வாயு (காற்று) யமன், நெருப்பு, வருணன் (மழை), சந்திரன், பிரஜாபதி, முப்பாட்டனார் ஆகிய எல்லோராமாக விளங்குகிறீர். உங்களை பலமுறை மட்டுமல்ல, ஆயிரம்முறை, அதற்கும் மேலாக வணங்குகின்றேன்"

[உலகங்களுக்குத் தந்தையாக காச்யபர் போன்ற ஞானிகள் விளங்குகின்றனர். இவர்களை பிரஜாபதி என்று அழைப்பர். அந்த ஞானிகளின் தந்தையாக பிரம்மன் திகழ்கின்றார். ஆகவே அவர் உலகங்களுக்குப் பாட்டனராக விளங்குகின்றவர். அந்த பிரம்மனுக்குத் தந்தையாக பகவனாகிய விஷ்ணுவானவன் இருப்பதால், பகவான் இந்த உயிர்களுக்கு முப்பாட்டனாராக அழைக்கப்பெறுகிறார். அந்த பகவானை எத்தனை முறை வணங்கினாலும் பக்தனின் பக்தி மேலும் அதிகரிக்கவே செய்கின்றது. ]

நம: புரஸ்தாதத ப்ருஷ்டதஸ்தே
நமோ அஸ்து தே ஸர்வத ஏவ ஸர்வ ।
அனந்த வீர்யாமித விக்ரமஸ்த்வம்
ஸர்வம் ஸமாப்னோஷி ததோ அஸி ஸர்வ: ।। (40)

"எல்லாமாக விளங்குபவரே! உம்மை (உன்) முனனின்றும், பின்னின்றும் இருந்து வணங்குகின்றேன். எல்லா திசைகளிலிருந்தும் உம்மை வணங்குகின்றேன். அளவில்லாத ஆற்றலையும், வீரத்தையும் கொண்ட நீங்கள் எல்லாவற்றிலும் நன்கு பரவி விளங்குகின்றீர். ஆகவே எல்லாமாக நீங்கள் திகழ்கின்றீர்."

[எந்தத் திசையாயினும், எந்தப் பொருளாயினும் அவையாவும் இறைவனாகத்தான் கருதப்படும். ஒவ்வொரு உயிரின் ஆத்மாவிலும் இறைவன் விளங்குவதால், எந்த உயிரினை வணங்கினாலும் அப்பகவானை வணங்குவதாகவே பொருளாகும். ஐம்பூதங்களிலும் அப்பகவான் உறைந்து விளங்குவதால், இயற்கையானது ஆச்சர்யமான, அச்சமிக்க, சிந்திக்கத்தக்க இயல்புகளை கொண்டதாக விளங்குகின்றது. ஆகவே இயற்கையினை, மற்றைய உயிர்களை வணங்குவது மூலம் நாம் அவ் இறைவனையே ஆராதிப்பதாகவே அமையும்.]

(தொடரும்)

## இறைவன் அருள்

தாய் ஒருத்தி தன் நோய்வாய்ப்பட்ட குழந்தைகளுக்கு ஒன்றுக்குச்சோறும் கறியும், மற்றொன்றுக்குச் சவ்வரிசிக் கஞ்சியும் வேறொன்றுக்கு வெண்ணெயும் ரொட்டியும் கொடுக்கிறாள். அதுபோல வேறு வேறான மனிதர்களுடைய மன நிலைக்கு ஏற்றபடி இறைவன் (ஸ்ரீகிருஷ்ணர்) வேறு வேறான நெறிகளை நியமித்து அருளியிருக்கின்றார்.

பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர்.

## வாராந்திர சேவைகள் மற்றும் உத்ஸவங்கள்

| | |
|---|---|
| 1) சிறப்பு பூஜை | (திங்கட்கிழமைகளில) ரூ. 3000/- காலை 6-00 மணிக்கு. 5 நபர்கள அனுமதிக்கப் படுவர். அன்பளிப்பு : வஸத்ரம், 5 பெரிய லட்டுகள், 5 வடைகள். |
| 2) அஷ்டதளபாத பத்மாராதானா சேவை : | (செவ்வாய்க்கிழமைகளில்) ரூ. 3500/- காலை 5-30 மணிக்கு. 5 நபர்கள் அனுமதிக்கப்படுவர். |
| 3) ஸகஸ்ர கலஸாபிஷேகம் | (புதன்கிழமைகளில்) ரூ. 5000/- காலை 5-30 மணிக்கு. 6 நபர்கள் அனுமதிக்கப் படுவர். அன்பளிப்பு : வஸ்த்ரம், 7 பெரிய லட்டுகள், 7 வடைகள் 5 அப்பங்கள், 5 தோசைகள், புளியோதரை, பொங்கல், சர்க்கரைப் பொங்கல், பாயசம், (ஒவ்வொன்றும் 1/32 சோலா அளவு. |
| 4) திருப்பாவாடை | (வியாழக்கிழமைகளில்) ரூ. 5000/- காலை 5-30 மணிக்கு. 6 நபர்கள் அனுமதிக்கப் படுவர். அன்பளிப்பு : வஸ்த்ரம், 7 பெரிய லட்டுகள், 7 வடைகள் 5 அப்பங்கள், 5 தோசைகள், 5 தேன் துளைகள், புளியோதரை, பாயசம், (ஒவ்வொன்றும் 1/32 சோலா அளவு.) |
| 5) அபிஷேகம் | (வெள்ளிக்கிழமைகளில்) காலை 3-30 மணிக்கு (அ) பூராபிஷேகம் : ரூ. 750/- (ஒவ்வொருவருக்கும்) அன்பளிப்பு: 2 சிறிய லட்டு, 2 வடைகள். (ஆ) புனுகுப்பாத்திரம் : ரூ. 300/- (ஒவ்வொருவருக்கும்) அன்பளிப்பு: 1 சிறிய லட்டு, 1 வடை. (இ) கஸ்தூரிக்கிண்ணம் : ரூ. 150/- (ஒவ்வொருவருக்கும்) அன்பளிப்பு: 1 சிறிய லட்டு, 1 வடை. அன்பளிப்பு : |

குறிப்பு :

(1) வரிசை 1 முதல் 4 வரை உள்ள சேவைகளுக்கு 90 நாட்களுக்கு முன்பேயே பதிவு செய்து கொள்ளலாம்.

(2) கிடைத்திடும் சீட்டுகளைப் பொறுத்து, ஒரு வருடத்திற்கு முன்பேயே அபிஷேகத்திற்கு முன்பதிவு ஏற்றுக்கொள்ளப்படும்.

லட்டுப்படி

ஆர்ஜிதம் பெரிய லட்டு படி - ரூ. 2500/-
சிறிய லட்டு படி - ரூ. 750/-

சீட்டு வாங்கிய பக்தரைச் சார்ந்த மொத்தம் ஐந்து நபர்களுக்கு ஏழுமலையான் தரிசன வசதி செய்து தரப்படும். தரிசனத்திற்குப் பிறகு 30 லட்டுகள் வழங்கப்படும்.

# படைப்பு, இலக்கு மற்றும் அறிவியல்

டாக்டர் த. உமாகாந்தன் - மதுரை.

இக்கட்டுரை கிரகங்கள், உயிர்கள், இயற்கை இவைகளின் படைப்பு மற்றும் நோக்கம், காலம், அழிப்பு, ஆன்மீக உலகம் இவை பற்றி விவரிக்கிறது.

**படைத்தல் :**

வேதங்களில் படைப்பிற்கு முன்பு முழு முதற்கடவுள் ஸ்ரீகிருஷ்ணர் ('கிருஷ்' மிக உயரிய "ணா" - ஆனந்தம்) மட்டுமே இருந்தார். வேறு எதுவுமே இல்லை. கற்பனைக்கும் எட்டாத அமைதி மட்டுமே இருந்ததாகக் கூறப்படுகிறது. கடவுளின் சக்திகளில் உயர்நிலை சக்திகள் இரண்டு. ஒன்று சுயவிரிவு. இது அவதாரங்கள் மற்றும் விஷ்ணு தத்துவம் என்பன. இரண்டாவது உபவிரிவு அல்லது ஜீவாத்மா தத்துவம். இரண்டாவதான கடவுளின் சக்தி, கீழ்நிலை சக்தி எனப்படும் இயற்கை ஆகும்.

படைக்க வேண்டும் என்று கடவுள் நினைக்கும்போது இவரின் சுயவிரிவான மஹா விஷ்ணு தோன்றுகிறார். மஹா விஷ்ணு கோடிக்கணக்கான ஜடகிரகங்களை படைக்கிறார். மஹாவிஷ்ணுவில் இருந்து கர்போதக ஷாயி விஷ்ணு தோன்றுகிறார். இவர் ஒவ்வொரு கிரகத்திற்குள்ளும் மாறுபாட்டை உண்டாக்குகிறார். எனவேதான் எந்த இரண்டு பொருட்களும் ஒரே மாதிரி இருப்பதே இல்லை. கர்போதக ஷாயி விஷ்ணுவில் இருந்து ஷீரோதக ஷாயி விஷ்ணு தோன்றுகிறார். இவர் கிரகங்களில் உள்ள ஒவ்வொரு அணுவுக்குள்ளும் நுழைந்து அதை நிலைபடுத்துகிறார். அதாவது எந்த பொருளுமே தன்நிலை மாறாமல் மாறினாலுமே விதிக்கு உட்பட்டு மாறும்படி நிலைபடுத்துகிறார். மீண்டும் ஒவ்வொரு ஜீவாத்மாக்களுக்குள்ளும் நுழைந்து அந்த ஜீவாத்மாவின் நண்பனாக, வழிகாட்டியாக மேற்பார்வை செய்பவராக, அனுமதிப்பவராக இருக்கிறார். (ப. கீதை: 13:23) இவரே பரமாத்மா என்றும் அறியப்படுகிறார். எல்லா உயிர்களின் பிறப்பிற்கும் கடவுளே மூல விதை. (ப.கீதை 7:10, 14:4)

கடவுளின் உபபிரிவில் இருந்து, இறைவனை மறந்து இயற்கையை அனுபவிக்க விரும்பிய எண்ணற்ற ஜீவாத்மாக்கள் வெளிவருகின்றனர். (ப.கீதை 7:5) இந்த ஜீவன்கள் கடவுளின் கீழ்நிலை சக்தி என்று கூறப்படும் இயற்கையில் (நீர், நிலம், நெருப்பு, காற்று, ஆகாயம், மனம், அறிவு, பொய், தன்னுணர்வு இவைகளால் ஆனது இயற்கை. இயற்கையும் முடிவற்ற மாற்றங்கள் உடையது (ப.கீதை 7:4) ) - வைக்கப்பட்டு இயற்கையின் கட்டுப்பாட்டிற்குள் வருகின்றன. இந்த கட்டுப்பட்ட ஜீவனின் நுண்ணுணர்வே ஆசை என்பது. இவர்களின் அனுபவிக்கும் ஆசைக்கு ஏற்ப உடல் கொடுக்கப்படுகிறது. இயற்கையின் தொடர்பில் ஜீவன்கள் முக்குணங்களையும், மாயையையும் வளர்த்துக் கொள்கின்றன. மேலும், இவை இரண்டாலும் ஜீவன் கட்டுப்படுத்தப்படுகிறான். இவையனைத்தையும் படைத்த பின் கடவுள் ஒவ்வொரு ஜீவனுக்கும் ஒரு சிறு சுதந்திரத்தைக் கொடுக்கிறார். இந்த சுதந்திரத்தில் மட்டும் கடவுள் தலையிடுவதில்லை. இந்த சுதந்திரத்தை வைத்துக்கொண்டு அவன் செய்யும் செயல்களே அவனது பாவ, புண்ணியங்கள், விதி, முக்தி போன்றவற்றை தீர்மானிக்கிறது.

ஜீவாத்மாக்களின் படைப்புக்கும், உடல்தேவைக்கும், அழிப்புக்கும் ஏற்ப பல தேவர்கள் படைக்கப்படுகின்றனர். உதாரணம்; படைப்பு-பிரம்மா, அழிப்பு-சிவன், மழை-இந்திரன், காற்று-வாயுபகவான். அனைத்து உடல் பெற்ற ஜீவாத்மாக்களையும் காத்து பராமரிக்கும் பொறுப்பை மஹா விஷ்ணு தாமே மேற்கொள்ளுகிறார். விஷ்ணுவை தவிர தேவர்களும், உடல் பெற்ற ஜீவன்களும் இயற்கை மற்றும் முக்குணங்களால் கட்டுப்படுத்தப்படுகின்றனர். ( ப.கீதை 18:40)

மொத்தம் 84,00,000 வகையான உடல் பெற்ற ஜீவன்கள் உள்ளனர். இந்த மொத்த ஜட உலகமும் தனது மேற்பார்வையின் கீழ் இயங்கிவருகிறது என்கிறார் ஸ்ரீகிருஷ்ணர். (ப.கீதை: 9:10)

**இருள் :**

இந்த படைக்கப்பட்ட மொத்த ஜட கிரகங்களும் மஹா தத்து

வம் என்னும் இருளால மூடப் பட்டு, அதாவது அரைப் பந்து போன்ற வடிவில ஆனமீக கிர கங்களில் ஒளியில் இருந்து மூடப்பட்டு இருளில வைக்கப் பட்டு இந்த கிரகங்கள் சூரிய தேவனால் பிரகாசப் படுத்தப் படுகின்றன. இது விஞ்ஞான உண்மையும் ஆகும். பூமியில இருந்து பல மைல்களுக்கு மேலே ராக்கெட்டில் சென்றால எப்பொழுதும் கடும் இருட்டை யும் நட்சத்திரங்களையும் காண லாம்.

### ஜட பிரபஞ்ச அமைப்பு மற்றும் கிரகங்களின் தரங்கள்:

ஜட கிரகங்கள் என்றால் நான்கு வகை துயரங்களான பிறப்பு, மூப்பு, பிணி, இறப்பு போன்றவை உள்ளன என்று பொருள். படைக்கப்பட்ட கிர கங்களில் பதினான்கு கொண் டது ஒரு பிரபஞ்சம் என் பது. இதுபோல் இந்த இருளில் கோடிக்கணக்கான பிரபஞ்சங் கள் உள்ளன. இதில் தலைமை கிரகம் எனப்படும் பிரம்மலோ கத்தில் (பிரம்மா வசிக்கும் உலகம்) வசிப்பவர்கள் உயர்ந்த வாழ்க்கை தரமும், இன்பமும் நீண்ட ஆயுளையும் கொண் டவர்கள். இந்திரன் வாழும் கிரகம் சொர்க்கம். கீழே வர வரப் படிப்படியாக கிரகங்க ளில் வாழ்க்கைத் தரமும், இன் பமும் ஆயுளும் குறைகின்றன. நாம் வாழும் பூமி மத்திய லோகம் எனப்படும். பூலோகத் தைச் சார்ந்தது. நரகம் என்பது இருளும், அறியாமையும், கடுமை யான துன்பங்களும், குறுகிய ஆயுளும், நம்பிக்கை அற்ற வர்களையும் கொண்ட கிர கம். எல்லா ஜட கிரகங்களி லும் வாழும் உயிர்வாழிகளுக்கு அந்தந்த கிரகங்களில் தேவைப் பட்டு இலலாதது எதுவுமிலலா மலும, தேவைக்கு மேறபட்டு எதுவும் இலலாதது வகையி லும் அமைக்கபபட்டு உள்ளன. ஆனால் ஜட கிரகங்கள் எல லாவற்றிலும் துனபம், பிறபபு, இறபபு உணடு. (ப.கீதை 8:16) அமெரிக்காவின U.F.O. என்னும் பறக்கும் தட்டுகளைப் பற்றி ஆராயும் கழகம் நம்மை விட முன்னேற்றம் அடைந்த மனிதர்கள் வாழும் பிற கிரகங் களும் உள்ளன என்று கருத்து தெரிவித்து உளளது.

### வேத இலக்கியங்கள் :

கடவுள், ஜீவாதமாக்கள கிரகங்களில் வாழ்வதற்கான முறைகளையும், கீழ்கிரகத்தில இருந்து உயர்ச்சி பெற்று மேல் கிரகத்திற்கு செல்லும் வழிமுறைகளையும் இறுதியில் அவரை அடைவது பற்றியும் விளக்கி வேதங்களை அளித் தார். உபவேதங்கள் எனப்படும் நான்கு சாஸ்திரங்களில் மனி தன் வாழ்வதற்குத் தேவையான கீழ்க்கண்டவற்றை விளக்குகி றார்.

(1) ஆயுர்வேதம்: உடலை பேணிக்காக்க - மருத்துவம்.

(2) அர்த்தவேதம்: பொருளா தாரம், அரசியல், வணிகம்.

(3) தநூர் வேதம்: போரிடும் முறைகள், கருவிகள், தந்திரங் கள்.

(4) காந்தர்வ வேதம்: ஆடல், பாடல், இசை நாட்டியம்.

கடவுள் ஸ்ரீகிருஷ்ணர் முதன் முதலில் பகவத் கீதையை சூரி யனிடம் (சுமார் 12,00,00,000 ஆண்டுகளுக்கு முன்பு) உபதே சித்தார். (ப.கீதை 4:1) பின்பு குருக்ஷேத்திர போர்க்களத்தில் மீண்டும் தாமே அர்ஜுனனுக்கு கீதையை உபதேசித்து இன்றி லிருந்து சுமார் 5100 ஆண் டுகள் ஆகின்றன. இதில் அவ ரைச் சரணடையும் வழியை தெளிவாக விளக்கி உள்ளார். (ப.கீதை 18:66). இவற்றையெல் லாம் அருளிய கடவுள் நீங் கள் வேதங்களில் கூறப்பட்ட யக்ஞங்களை செய்து உங்க ளது தேவைகளை தருபவர்க ளான தேவர்களை மகிழ்வியுங் கள். தேவர்கள் மகிழ்ந்து உங் களது வாழ்க்கைக்குத் தேவைப் பட்ட பொருள்களை வழங்கு வார்கள். இதனால் எல்லோரும் சந்தோஷமாக இருங்கள் என்றார். (ப.கீதை 3:10)

### கடமை :

ஜட இயற்கையில் ஒவ்வொ ருவரும் கொண்ட குணத்திற் கும், உடலுக்கும் ஏற்ப கட வுள் அவர்களுக்கு ஏற்ற கட மைகளை விதித்தார். இக்கட மைகளே உண்மையான செயல் களாக ஆகின்றன. ஒரு ஜீவ னுக்கு விதிக்கப்பட்ட கடமை கள் என்றுமே பாவ விளைவு களில் பாதிக்கப்படுவதில்லை. எவ்வளவுதான் இவ்வுலக பார் வையில் ஒருவனது கடமை கள் கீழ்த்தரமானதாக இருந் தாலும் அவன் பாவத்தால் பாதிக்கப்படுவதில்லை. ஏனென் றால் இக்கடமைகள் முழுமு தற் கடவுளால் விதிக்கப்பட்ட வைகள். கரு கருப்பையாலும், நெருப்பு புகையாலும், கண் ணாடி தூசியாலும் மூடப்பட்டு இருப்பது போல ஒவ்வொருவ னுக்கும் விதிக்கப்பட்ட கட மைக்கான செயல்கள் ஏதேனும் ஒரு பாவத்தால் சூழப்பட்டு உள் ளன. (ப.கீதை 18:48). கடவுளை உணர்வதற்கு முதல் வழியே தனது கடமைகளை விருப்பு, வெறுப்பு இன்றி பலனுக்காக

இசையின்றி, சரியான முறையில் செய்வதே ஆகும். (ப.கீதை 3:9)

### உலகம் இயங்குதல் மற்றும் கர்மா :

கருவின் மூலம், முட்டைகளின் மூலம், விதைகளின் மூலம் மற்றும் புளித்தலின் மூலம் என்ற இந்த நான்கு விதங்களில் உயிர்வாழிகளின் பிறப்பு நிகழ்கின்றன. இப்பொழுது உலக இயக்கம் ஆரம்பித்து விட்டது. ஒவ்வொரு உயிரும் முக்குணங்களால் ஆளப்பட்டு, பொய் தன்னுணர்வால் உந்தப்பட்டு, அறிவால் சிந்தித்து, மனதால் கர்மாவை (செயலை) விரும்பி அவற்றை புலன்களால் தனது ஆசைக்கு ஏற்ப நல்ல அல்லது கெட்ட வழிகளில் செய்து (உழைத்து), பலனை புலன்களால் அனுபவித்து, மனதால் திருப்தி பெற்று, தனது செயல்களின் பலனுக்கு ஏற்ற விளைவுகளிலும் அதன் பின் விளைவுகளிலும் சிக்கிக் கொண்டு, வாழ்க்கை போராட்டத்தை நடத்தி, அறியாமையிலும் பல செயல்களை செய்து, இவைகளால் தனது விதியை தானே நிர்ணயித்து, முதுமைக்கும் நோய்க்கும் உட்பட்டு, இறுதியில் இறந்து, மீண்டும் தனது விதிப்படி, (முன்னேற்பாடு) காற்று வாசனையை சுமந்து செல்வது போல், தனது பழைய உணர்வுகளுடன் ஜீவாத்மா ஒரு புதிய உடலை ஏற்கிறான். (ப.கீதை 15:8)

இதுவே உலகில் பலர் தங்களது முற்பிறப்பு பற்றி மிக சரியாகக் கூறுவதற்குக் காரணம் ஆகும். மறுபிறப்பு பற்றி அறிவியலும் ஒப்புக்கொண்டு உள்ளது. இதுபற்றி ஆராய இன்று சர்வதேச அளவில் தனித் துறையும் ஏற்படுத்தப்பட்டு உள்ளது. இந்தியாவை சார்ந்த எச்.என். பானர்ஜி முன்னின்று மறு பிறப்பை பற்றி ஆய்வு செய்து பல உண்மைகளை நிரூபித்துள்ளார். இவர் மதவாதி அல்ல. மேலும் மறு பிறப்பு பற்றி இங்கிலாந்தில் உள்ள ஆக்ஸ்போர்டு பல்கழக ரேடியோனிக் ஆராய்ச்சி நிலையம், அமெரிக்காவின் ஹெண்ட் பல்கலைக்கழக மனவியல் ஆய்வுத்துறை ஆகியவை நிரூபித்து உள்ளன. வேதத்தில் "புனரபி ஜனனம் புனரபி மரணம்" என்றும் கூறப்பட்டுள்ளது.

இவ்வாறு ஜீவன் பிறப்பு, இறப்புச் சூழலில் சிக்கிக் கொள்கிறான். இது வேத பாஷையில் "புன புன ஸர்வித ஸர்வானாம்" எனப்படுகிறது. அதாவது செய்வதையே மீண்டும் மீண்டும் செய்வது. அதாவது ஒவ்வொரு உயிர்வாழியும் உண்பது, உறங்குவது, உடலுறவு கொள்வது, தன்னை தற்காத்துக் கொள்வது என்ற இந்த நான்கு செயல்களையே ஒவ்வொரு பிறவியிலும் செய்கின்றன. ஒரு செல் உயிர் எனப்படும் அமீபா முதல் மிக உயர்ந்த பிரம்மா வரை இதே தான். இச்செயல்களை ஒவ்வொரு உயிரும் தங்களது சூழ்நிலைக்கும் வசதிக்கும் ஏற்ப மாறுபட்ட தராதரங்களில் செய்கின்றன. ஆனாலும் விஷயமும் திருப்தியும் ஒன்றேதான். எனவே தான் "மருத்யு ஸம்ஸார வர்த்தமானி" எனப்படும் பிறப்பு இறப்பு சூழல் ஒவ்வொரு உயிர்வாழியையும் தொடர்கிறது.

### பிறப்பு, இறப்பில் இருந்து விடுபடும் வழி

இதற்கு உதவுவது கடவுளின் உபதேசங்களும், ஆன்மீக குருவின் வழிகாட்டலுமே. கடவுள் குறிப்பிட்ட காலங்களில் தானே நேரில் தோன்றி அல்லது அவதாரங்கள் மூலம் அல்லது ஆசாரியர்களின் மூலம் மற்றும் பல விதங்களில் நமக்கு அறிவூட்டுகிறார். கடவுளுக்கு மதம், மொழி, இனம் என்ற பாகுபாடு கிடையாது. அவர் எந்த மக்களுக்காகவும் பிரபஞ்சத்தின் எப்பகுதியிலும் அந்த சூழ்நிலைக்கு ஏற்ப தோன்றுவார். ஸ்ரீகிருஷ்ணரின் அவதாரங்கள் பற்றி ஸ்ரீமத் பாகவதத்தில் மிக விளக்கமாக உள்ளது. இதற்காகவே கடவுள் மறைபொருள் எனப்படும் வேதங்களை அளித்து, வேதம் புரியாதவர்களுக்கு தனது அவதாரங்கள் மூலம் அவற்றை புராணங்களில் விவரித்து, வேதாந்த (வேதம்-அறிவு, அந்தம்-இறுதி) சூத்திரத்தை இயற்றி, இன்னும் எளிமையாக இராமாயணம், மகாபாரதம் என்னும் இதிகாசங்களில் விளக்கியும் உள்ளார். கடவுளை அடைய பலவித வழிமுறைகள் உள்ளன. ஆரம்பத்தில் கடினமானதாக இருந்தாலும் இறுதியில் மிக இன்பமானவையே. ஆனால் ஜட உலகில் இன்பம் இதற்கு நேர்மாறானவை.

### உயிரினங்களின் விபரம்

மொத்தம் 84,00,000 வகையான உடல் பெற்ற ஜீவாத்மாக்கள் உள்ளன. இவைகள் முறையே நீர்வாழ்வன, தாவரங்கள், ஊர்வன, பறப்பன, விலங்குகள், இறுதியில் மனிதன் என்று ஆறுவடிவில் பரிணாம முன்னேற்றம் அடைகின்றன. மனிதனுக்கு மனிதப் பிறவியும் நிச்சயம் இல்லை. இவனது செயலுக்கு

ஏற்ப மனிதன் கீழ்நிலை தாவர மாகவோ, மிருகமாகவோ உயர் நிலையில் உள்ள தேவராகவோ பிறவி எடுக்கலாம். எனவே தான் மனிதன் கீழ்நிலை மற்றும் உயர்நிலைக்கு இடைப் பட்ட "தடஸ்த சக்தி" எனப்படும் நடுநிலையை சார்ந்தவன். மனி தன் "கர்மா" எனப்படும் தனது செல்களால் கீழே இழியவும், மேலே உயரவும் வாய்ப்பு உள் ளவன். ஆனால் மனிதனைத் தவிர மற்ற அனைத்து உயி ரினங்களும் மேலே உயரவே வாய்ப்பு உள்ளவை. எனவே மாறுபட்ட தோற்றமும் உட லும் கொண்ட எல்லா உயிர்க ளும் பரிணமம் எனப்படும் ஏணி யில் பல படிகளில் உள்ளவர் கள். மூலத்தில் அனைவரும் சகோதரர்கள். கடவுள் ஸ்ரீகிருஷ் ணரின் குழந்தைகள். பரிண மத்தில் இழிந்தாலும், உயர்ந் தாலும் எல்லா உயிர்களும் பிறந்து, வளர்ந்து, சிலகாலம் வாழ்ந்து, உபபொருள்களை உற் பத்தி செய்து (இனபெருக்கம்) தேய்ந்து, (முதுமை) இறுதியில் அழிகின்றன (இறப்பு). எல்லோ ரும் இந்த ஆறு நிலைகட்கு உட்பட்டவர்களே.

மேலும் சிறப்பான முறையில் மனித இனம் மத அடிப்படை யில் அமைக்கப்படாமல், "வர் ணாச்ரமம்" எனப்படும் "வேதங் களின்படி நடப்பவர்கள்" என்ற முறையில் அமைக்கப்பட்டது. "வர்ணம்" என்பது பிராம்ணன், க்ஷத்திரியன், வைசியன், சூத் திரன். "ஆஸ்ரமம்" என்பது பிரம்மசாரி, கிருஹஸ்தன், சந்நி யாசி, துறவி என்பன ஆகும்.

## மாயை அல்லது மாயா :

மாயை என்ற இந்த சொல் லுக்கு "இது இல்லை" என்று பொருள். "மா" இல்லை "யா" "இது" என்று பொருள். அதா வது நிலையானவை அல்ல என்று பொருள். ஆன்மீக உலகு மட்டுமே நிலையானது.

இறைவன ஒளி என்றால் இரு ளாகிய மாயை அவரது பின் னணி. வியாச பகவான், ஸ்ரீகிருஷ்ணரை நேரில் கண்ட போது அவரின் பின்னணி யில மாயையையும் கண்டார். மாயை இறைவனின் புறச்சக் தியே (ஸ்ரீமத் பாகவதம் 1-7-4). உயிர்வாழி (ஆத்மா) மூலத்தில் கடவுளின் அம்சமா னவன். அதாவது அவரின ஒரு சிறு அங்கம். ஆனால், ஜட இயற்கையின் தொடர்பின் காரணமாகக் கட்டுண்ட உடல் உடைய நிலையில் தன்னை, தான் வாழும் ஜட உல கம் மற்றும் உடல் சார்ந்த தாகக் கருதுகிறது. இதுவே மாயை என்பது. இவ்வாறு கருதி அவன் உடல் சார்ந்த செயல்களை செய்து பிரச்னை களை அதிகமாக்கிக்கொள்கி றான். மாயை பற்றிய விப ரம் ஸ்ரீமத் பாகவதத்தின் முதல் காண்டத்தில் ஏழாவது அத்தி யாயத்தில் மிக விரிவாக விளக் கப்பட்டுள்ளது.

வேதங்களிலும்;

மாயாம் து ப்ரக்ருதிம் வித்யான்
மாயினம் து மஹேஸ்வரம்

"மாயை பொய்யானதும், தற் காலிகமானதும்தான் என்று லும் இந்த மாயையின் பின் னணி பரம அதிகாரியான, மஹேஸ்வரனான, பரம மந்திர வாதியான முழு முதற்கடவுள் பகவான் ஆவார்" என்று கூறப்பட்டுள்ளது. மாயையை வெல்ல ஒரே வழி அறிவு, மனம் புலன்கள் இவற்றை ஆன் மீக குருவின் வழிகாட்டலின் கீழ் இறைவனுக்குத் தொண்டு செய்ய வைப்பதுதான். வேறு வழியே இல்லை.

## காலம் மற்றும் அழிப்பு :

ஜட உலகில் காலம் பல கல் பங்களாகப் பிரிக்கபட்டு உள் ளது. ஒவ்வொரு கல்பமும் நான்கு யுகங்களாகப் பிரிக் கப்பட்டுள்ளது. "சத்யயுகம்" எனப்படும் அறச்செயல்கள் மட் டுமே கொண்ட யுகம் 17,28,000 ஆண்டுகள் கொண்டது. "திரே தாயுகம்" எனப்படும் அறச்செ யல்கள் குறைகின்ற யுகம். 12,96,000 ஆண்டுகள் கொண் டது. "துவாபரயுகம்" எனப்ப டும் அறமற்ற செயல்கள் தோன் றுகின்ற யுகம். 8,64,000 ஆண் டுகள் கொண்டது. கலியுகம் எனப்படும் நாம் இப்பொழுது வாழ்கின்ற அறமற்ற செயல்கள் நிறைந்த யுகம். 4,32,000 ஆண் டுகள் கொண்டது. இதில் 5100 ஆண்டுகள்தான் கழிந்து உள்ளன. இந்த நான்கு யுகங் கள் சேர்ந்தது ஒரு சதுர்யுகம். இதுபோன்ற ஆயிரம் சதுர்யு கங்கள் கொண்டது படைப்புத் தேவன் பிரம்மாவின் பகல். அதாவது 432 கோடி ஆண் டுகள். இதுபோல நீண்டது அவரது ஒரு இரவு. அதா வது பிரம்மாவின் ஒருநாள் என் பது மனித கணக்கின்படி 864 கோடி ஆண்டுகள் கொண் டது (ப.கீதை 8:17). உதாரண மாக நமது சூரிய குடும்பத்தில் உள்ள கிரகங்களில் ஒரு வரு டம் என்பது ஒவ்வொரு கிர கத்திற்கும் மாறுபட்ட ஆண்டு களைக் கொண்டது. மிக தூரத்தில் உள்ள புளூட்டோ கிரகத்திற்கு ஒரு ஆண்டு என் பது நமது மனித கணக்கின் படி பல நூறு ஆண்டுகளைக் கொண்டது. இதுபோலவே செவ்வாய், வியாழன், சனி,

யுரேனஸ் போன்ற கிரகங்களும் மாறுபட்ட காலத்தைக் கொண்டவைகள். ஆனால் பூமிக்கு ஒரு ஆண்டு என்பது 365 நாள் மட்டுமே. இதுவும் அறிவியல் கருத்தே ஆகும்.

பிரம்மாவின் பகலில் அனைத்து ஜீவாத்மாக்களும் தங்களது கடமைக்கு ஏற்ற செயல்களில் ஈடுபட்டு உள்ளன. பிரம்மாவின் பகல் முடிந்து அவரது இரவு தொடங்கும் போது பிரம்ம லோகம் தவிர அனைத்து ஜடகிரகங்களிலும் நீர் அல்லது நெருப்பால் ஓரளவு அழிவு உண்டாக்கப்படுகிறது. அப்போது அனைத்து உடல் பெற்ற ஆத்மாக்களும் உடலை விட்டுவிட்டு (இறந்து) விஷ்ணுவிடம் தங்குகின்றன. பிரம்மாவின் இரவில் கிரகங்களில் மீண்டும் உயிர்வாழ்வதற்கு ஏற்ப சூழ்நிலைகள் சரி செய்யப்படுகின்றன. பிரம்மாவின் இரவு முடிந்து அவரது பகல் தொடங்கும் போது, விஷ்ணுவில் தங்கி இருந்த ஜீவாத்மாக்கள் மீண்டும் தங்களின் ஆசைகளைப் பூர்த்தி செய்யத் தக்க உடல்களைப் பெற்று மீண்டும் இயங்க ஆரம்பிக்கின்றன. இவ்வாறு மாறி மாறிப் பிறப்பும், அழிப்பும் நிகழ்கிறது. (ப.கீதை 8:18:19) இவ்வாறாக பிரம்மா ஒருநாள், ஒரு வாரம், ஒரு மாதம், ஒரு ஆண்டு என்று நூறு ஆண்டுகள் வாழ்கிறார். இதில் பன்னிரண்டரை ஆண்டுகள் பிரம்மாவின் படைப்பிற்குச் செலவிடப்படுகின்றது.

இந்த நூறு ஆண்டு இடைவெளியில் தன்னையும், கடவுளையும் உணர்ந்த ஆத்மாக்கள் முக்தி பெற்றுக் கடவுளை அடைகின்றன. இது தவிர இறுதியில் பிரம்மா ஒருவருக்கு மட்டும் நேரடியாக முக்தி அளிக்கப்படுகிறது. மீதம் உள்ள அனைத்து ஆத்மாக்களும், பிரம்மாவின் ஆயுள் முடிவில், இந்த கிரகத்தில் இருந்து பெற்று வளர்த்த உடல்களையும், துன்பப்பட்டுத் தேடிச் சேர்த்த உரிமைகளையும், இம்மண்ணிலே விட்டு விட்டுத் தோன்றும் பொழுது ஜீவாத்மா எப்படி வந்ததோ அந்த நிலையிலே மஹாவிஷ்ணுவில் ஓய்வெடுக்கச்செல்கிறது. கர்போதக ஷாயி மற்றும் ஷீரோதக ஷாயி விஷ்ணு இவர்களுடன், ஜட இயற்கை முழுதுமாக அழிக்கப்பட்டு உள்வாங்கப்பட்டு மஹாவிஷ்ணுவில் நுழைகின்றன. கடவுளால் அருளப்பட்ட வேதங்கள் உருப்பெற்று மஹாவிஷ்ணுவை துதிக்க ஆரம்பித்து மீண்டும் படைப்பை வேண்டுகின்றன. (ஸ்ரீமத் பாகவதம் 10வது காண்டம்) கடவுள் விரும்பு போது முன்பு விளக்கியபடி மீண்டும் படைப்பு உண்டாக்கப்படுகிறது.

## விண்ணுக்கு அப்புறத்து ஆன்மீக உலகம்

ஆன்மீகம் என்றாலே உடல் சாராதது என்று பொருள். நம்மை மூடி இருக்கும் மஹத்தத்துவம் எனும் இருளுக்கு மேல் ஆன்மீக உலகம் உள்ளது. கடவுளின் உலகில் ஆன்மீக உலகம் 3/4 பங்கு, ஜட உலகம் 1/4 பங்கு, ஆன்மீக உலகம் வைகுந்த உலகம் எனப்படும். இந்த சுய ஒளி பெற்ற கிரகங்களில் இருளே கிடையாது. இன்ப - துன்பம், குளிர்-வெப்பம், மான- அவமானம், விருப்பு-வெறுப்பு, பிறப்பு-இறப்பு போன்ற இருமைகள் இங்கு இல்லை. எல்லாமே ஒருமையான இன்ப மயம்தான். இங்கு வாழ்பவர்கள் அனைவரும் முக்திபெற்ற ஆன்மீக உடலை உடைய ஆத்மாக்கள். மனதின் வேகத்தில் கோடிக்கணக்கான ஆண்டுகள் பிரயாணம் செய்தாலும் ஆன்மீக உலகம் அளவற்றது என்பதைக் காணலாம் என்று ப்ரஹ்ம ஸம்ஹிதை கூறுகிறது. இங்குள்ள ஒவ்வொரு கிரகத்திற்கும் நான்கு கரங்களையுடைய ஒரு விஷ்ணு தலைமை பொறுப்பை ஏற்கிறார். இவர்களின் கரங்களில் இருக்கும் சங்கு, சக்கரம், தாமரை மலர், கதாயுதம் போன்றவற்றிற்கு ஏற்ப பிரத்யும்னன், அநிருத்தியன் போன்ற பல பெயர்களில் அழைக்கப்படுகிறார். இக்கிரகங்களில் தனது சக்தியை வியாபித்து இருக்கிறார். மொத்த ஜட ஆன்மீக உலகிற்கும் ஸ்ரீகிருஷ்ணர் தலைமையும் இறுதிப் பொறுப்பும் ஏற்கிறார். இங்கு நம் கற்பனைக்கும் எட்டாத இன்பங்கள் உண்டு. இங்கு உள்ளது போல் அர்த்தமற்ற விதியில் சிக்க வைக்கும் கர்மாக்களும் அறியாமையும் இல்லை. இந்த பூமிக்கும் மற்றும் பல ஜட கிரகங்களுக்கும் வந்த பல அவதாரங்கள் இங்கு நித்தியமாக நிலைபெற்று இருக்கிறார்கள்.

ஜட உலகில் கடவுளின் தொண்டில் ஈடுபட்டுத் தன்னுணர்வு பெற்று இறக்கும் அல்லது வேதங்களில் குறிப்பிடப்பட்ட புண்ணிய நேரங்களில் இறக்கும் உயிர்வாழிகளின் ஆத்மாக்கள் நேரடியாக இந்த ஆன்மீக கிரகங்களில் நுழைகின்றனர். ஜட உலகில் ஆத்மா உள்ள கரு விரிவடைந்து ஜட பொருள்களால் உடலைப் பெறுவது போல், இவர்களின் ஆத்மாக்கள் இங்கு விரிவடைந்து

ஆன்மீக பொருள்களால் ஆன்மீக உடலைப் பெறுகின்றனர். இந்த ஆத்மாக்களுக்கு முறையே ஐந்து வழிகளில் முக்தி கிடைக்கின்றன. அதாவது ஜட உலகில் தாங்கள் செய்த கடவுளின் தொண்டின் தரத்திற்கு ஏற்ப கிடைக்கிறது.

(1) சாயுஜ்ய முக்தி-கடவுளின் அருவ பிரமத்தில் கலப்பது.

(2) சாலோக்கிய முக்தி - கடவுள் வாழும் உலகத்தில் வாழ்வது.

(3) சார்ஷ்டி முக்தி-கடவுளைப் போன்ற ஐஸ்வர்யங்களைப் பெறுவது.

(4) சாரூப முக்தி - கடவுளைப் போன்ற உருவத்தைப் பெறுவது.

(5) சாமீப்ய முக்தி - கடவுளுக்கு மிக அருகில் அவரது நெருங்கிய நண்பராக இருப்பது-அர்ஜுனன் போல. இதுவே உயர்ந்தபட்ச முக்தி.

இப்படி ஆன்மீக உடலை பெற்றவர்கள் மீண்டும் ஜட கிரகங்களுக்கு வருவதேயில்லை. நமக்கு வழிகாட்ட அவதாரங்கள் என்ற நிலையில் சிலர் மட்டுமே அங்கிருந்நது வந்து திரும்புகிறார்கள். மற்றபடி அனைவரும் நித்தியமான அறிவு நிறைந்த ஆனந்தத்தை அனுபவிக்கின்றனர்.

ப்ரம்ம சம்ஹிதையின் ஐந்தாவது அத்தியாயத்தில் இருள் நிறைந்த ஜட கிரகங்களுக்கு அப்பாற்பட்ட ஆன்மீக கிரகங்கள் பற்றி விரிவாகக் கூறப்பட்டுள்ளது. இதுபற்றி பகவத் கீதையில் பகவான் ஸ்ரீகிருஷ்ணர் உறுதிபடுத்துகிறார் (ப.கீதை 15:6, 8:20, 21)

பிரம்ம சம்ஹிதையில,

யஸ்யப ப்ரபா ப்ரபவ தா
ஜகதண்ட கோடி
கோடிஸ் வசேஷ வசுதாதி
விபூதி பின்னம்
தத் ப்ரம்ம நிஷ்கனமனந்த
மசேஷபூதம்
கோவிந்தமாதி புருஷம்
தமஹம் பஜாமி

என்று கூறப்பட்டுள்ளது.

இக்கருத்தையே ரஷ்ய விண்வெளி விஞ்ஞானி வரண்ட் சோவ் வெலியனினோவ் என்பவர் "பகுத்தறிவு பெற்ற உயிர்வாழிகளால் வாசம் செய்யப்படும் எண்ணற்ற கிரகங்கள் இருக்க வேண்டும் . இந்த கிரகங்களெல்லாம் நூறு மில்லியனுக்கும் மேற்பட்டவை. அவைகளில் உயிர்கள் வாழ்கின்றன" என்று நிச்சயம் செய்கிறார். (மாஸ்கோ நியுஸ் நாள்: 21-2-1960) இந்தக் கருத்தையே வ்ளாடிமீர் அல்பதோவ், இரசாயன விஞ்ஞானி நிகோலி ஹிசோவ் போன்றவர்களும் உறுதி செய்கின்றனர்.

ஜட கிரகங்களில் எவ்வளவு நற்செயல்கள் புரிந்து சத்தியலோகம், சொர்க்கலோகம் போன்ற கிரகங்களுக்கு உயர்ச்சி பெற்றுச் சென்றாலும் நமது புண்ணியங்களின் அளவிற்குத் தக்க இன்பமும், நீண்ட ஆயுளும் அனுபவிக்கலாம். நமது புண்ணியங்களின் பலன தீர்ந்தவுடன், மீண்டும் இறந்து, மீண்டும் நாம் புறப்பட்டுச் சென்ற கிரகத்தையே வந்து சேர வேண்டும். எனவே நமது இறுதி இலக்கு எப்பொழுதும் ஆன்மீக உலகை அடைவதாகவே இருக்க வேண்டும். (ப.கீதை 8:21)

ஆன்மீக உலகங்களில் மிகவும் உயர்ந்த கிரகம் "கோலோக பிருந்தாவனம்". இங்குதான் கடவுள் ஸ்ரீகிருஷ்ணர் வாசம் செய்து தினமும் நூறாயிரக் கணக்கான லட்சுமிகளால் பக்தியுடன் சேவை செய்யப்படுகிறார். (ப்ரம்மஸம்ஹிதா 5:29)



## நூற்றியெட்டு திவ்யதேச தலங்களுக்கு மங்களாசாஸனம் செய்த ஆழ்வார்கள்

| | | தலங்கள் |
|---|---|---|
| 1) | திருப்பாணாழ்வார் மங்களாசாஸனம் | 3 |
| 2) | தொண்டரடிப்பொடியாழ்வார் மங்களாசாஸனம் | 3 |
| 3) | பொய்கையாழ்வார் மங்களாசாஸனம் | 7 |
| 4) | குலசேகராழ்வார் மங்களாசாஸனம் | 7 |
| 5) | ஆண்டாள் மங்களாசாஸனம் | 9 |
| 6) | பூதத்தார் மங்களாசாஸனம் | 13 |
| 7) | பேயாழ்வார் மங்களாசாஸனம் | 14 |
| 8) | திருமழிசையாழ்வார் மங்களாசாஸனம் | 16 |
| 9) | பெரியாழ்வார் மங்களாசாஸனம் | 20 |
| 10) | நம்மாழ்வார் மங்களாசாஸனம் | 35 |
| 11) | திருமங்கையாழ்வார் மங்களாசாஸனம் | 40 |

குறிப்பு : (மதுரகவியாழ்வாரின் எம்பெருமானைப்பற்றி பாசுரம் இல்லை. ஆனால் நம்மாழ்வாரைப்பற்றி 'கண்ணிநுண் சிறுத்தாம்பு' என்ற பாசுரங்களை அருளிச்செய்து பன்னிரெண்டு ஆழ்வார்கள் வரிசையில் இடம்பெற்றார்.)

# திருமலை ஸ்ரீவேங்கடேஸ்வர சுவாமி திருக்கோயில்

# வருடாந்திர பிரம்மோத்ஸவம்

## உத்ஸவ விவரங்கள்

(15–9–96 முதல் 23–9–96 வரை)

| | | வாகனங்கள் | |
|---|---|---|---|
| நாள் | கிழமை | காலை | இரவு |
| 14-9-96 | சனி | | சேனாதிபதி உத்ஸவம் |
| 15-9-96 | ஞாயிறு | வஜ்ர கவசத்துடன் தங்கத்திருச்சி உத்ஸவம் துவஜாரோஹணம் | பெரிய சேஷ வாகனம் |
| 16-9-96 | திங்கள் | சிறிய சேஷவாகனம் | ஹம்ஸ வாகனம் |
| 17-9-96 | செவ்வாய் | சிங்க வாகனம் | முத்துப்பந்தல் வாகனம் |
| 18-9-96 | செவ்வாய் | கல்பவிருக்ஷ வாகனம் | ஸர்வபூபால வாகனம் |
| 19-9-96 | புதன் | பல்லக்கில் மோகினி அவதாரம் | கருட வாகனம் |
| 20-9-96 | வியாழன் | ஹனுமான் வாகனம் (மாலையில் வசந்தோத்ஸவம்) | யானை வாகனம் |
| 21-9-96 | வெள்ளி | சூர்யபிரபை | சந்திரபிரபை வாகனம் |
| 22-9-96 | சனி | திருத்தேர் | குதிரை வாகனம் |
| 23-9-96 | ஞாயிறு | பல்லக்கு உத்ஸவம் தீர்த்தவாரி அவப்பிரதோத்ஸவம் சக்ரஸ்நானம் | திருச்சியில் துவஜாவரோஹணம் |

# நவராத்திரி பிரம்மோத்ஸவம்

(13–10–96 முதல் 21–10–96 வரை)

| | | வாகனங்கள் | |
|---|---|---|---|
| நாள் | கிழமை | காலை | இரவு |
| 13-10-96 | ஞாயிறு | வஜ்ர கவச அலங்காரத்துடன் தங்கத்திருச்சி வாகனத்தில் உத்ஸவர் | பெரிய சேஷ வாகனம் |
| 14-10-96 | திங்கள் | சிறிய சேஷவாகனம் | ஹம்ஸ வாகனம் |
| 15-10-96 | செவ்வாய் | சிங்க வாகனம் | முத்துப்பந்தல் வாகனம் |
| 16-10-96 | புதன் | கல்பவிருக்ஷ வாகனம் | ஸர்வபூபால வாகனம் |
| 17-10-96 | வியாழன் | பல்லக்கில் மோகினி அவதாரம் | மகர கண்டி, லக்ஷ்மிஹாரத்துடன் கருட சேவை |
| 18-10-96 | வெள்ளி | ஹனுமான் வாகனம் மாலை: வசந்தோத்ஸவம் | யானை வாகனம் |
| 19-10-96 | சனி | சூர்யபிரபை | சந்திரபிரபை வாகனம் |
| 20-10-96 | ஞாயிறு | திருத்தேர் | குதிரை வாகனம் |
| 21-10-96 | திங்கள் | பல்லக்கு, திருச்சி உத்ஸவம் தீர்த்தவாரி அவப்பிரதோத்ஸவம் சக்ரஸ்நானம் | திருச்சி வாகனம் பாரிவேட்டை உத்ஸவம் |

# வைணவ வழக்குச் சொற்களும் பொருள்களும்

டாக்டர். மா. வரதராஜன் - திருப்பதி.

## தா

தாக்க - படும்படி
தாக்கினாலும் - பட்டாலும்
தாங்குவித்தல் - தரித்தல்
தாடாளன் - பெருமைபொருந்தியவன்; முயற்சியுள்ளவன
தாத்தி - ஆத்தி
தாதி - பரணி, செவிலித்தாய்
தாதை - தந்தை
தாடு - தலைமை, வலி
தாபதர் - தவசிகள்; சடைமுடியர்
தாமம் - ஒளி, மாலை
தாமான தன்மை - பெண்ணிலைமை கொண்டு பாடாமல் ஆழ்வார்கள் தமது நிலைமையில் பாடி நிற்பது தரமான தன்மையாகும்.
தாய்தலை - முக்கியமாதல்; மெய்யான தலை
தாய - அளந்த, தாவிய
தாயப்பதிகள் - எம்பெருமானுக்கே உரிய திவ்ய தேசங்கள், பழையதாய் வருகிற ஸ்தானங்கள்
தாயர் - தாய்மார்
தாயவர் - நினைத்தபோது தாமே வந்து கிட்டுமவர்
தாயவள் - தாயானவள்
தாயவன் - தாய்போலே பரிவுடையவன்; அளந்துகொண்டவன்
தாயன் - காப்பாளன்
தார்க்கிளந் தம்பி - மாலையிட்டு அரசை ஆள மறுத்த பரதாழ்வான்
தாரகை - நட்சத்திரம்; பூமி, தரை
தாரா - நீர்வாழ்பறவை
தாரான்வரும் - கொடுக்கமாட்டான், கொடுத்தாலும் கொடுப்பான்
தாரி - வழி
தாரியாதாகில் - பொறுதாகில்
தாரில் நறுந்துழாய் - செவ்வியையுடைய மணம் மிக்க நல்ல திருத்துழாய்
தாரை - பூ, தரணி, தரை
தாரையூறும் நறுந்தளிர் - பூவைத் தோற்றுவிக்கும் தளிர், தாரை என்று நீர்த்தாரையாய் தேனொழுகும் தளிர்
தாலம் - உணவுக்கலம், நாக்கு
தாலவட்டம் - யானையின் செவி, விசிறி
தாலிக் கொழுந்து - கொழுந்தான தாலி, உயர்ந்த தாலி. தாலி-தாலம்-பனை. அதன் கொழுந்து வெள்ளைக்குருத்து பனைஓலைத் தாலி கட்டுவது சாதி வழக்கம.
தாலேலோ - தால் ஏலஓ - தால் நாக்கு. குழந்தைகளைத் தொட்டிலிலிட்டு பெணகள நாவை அசைத்து ஒலித்துச சீராட்டுதலை தாலேலோ என்று வழங்குதல் மரபு.
தாலொலித்திடும் - தாலாட்டும்
தாவடி - தாவிய அடி, தாவுவதாக இட்ட அடி.
தாவரும தீமை - தாணடமுடியாத தீமை - பாபம்.
தாவளம - தங்குமிடம்
தாவிலை - தேவலை என்பதன் மாற்றுச் சொல்
தாழ்கின்ற நெஞ்சம் - ஈடுபட்ட நெஞ்சம், சிரமப்பட்ட நெஞ்சம்
தாழ்ச்சி - சிற்றின்பப்பற்று.
தாழ்த்தான் - தாமதித்தான
தாழ்ந்த தனஞ்சயன் - சரணகதி செய்த அர்ஜுனன்
தாழ்ந்தது - தரைப்பட்டது
தாழ்ந்தூதாய் - குனிந்து ஊதாய்
தாழ்பீலி - தூக்கின சின்னம், பீலி - தாழ்ந்த வாத்தியம். சின்னம்- ஊதுகிற திருச்சின்னம்.
தாழ்வர் - தாழ்வரை
தாழல் - இறைஞ்சுகை, குறைதல், தங்கல்
தாழப்படாமல் - தரைப்படாமல, மங்காமல்
தாழி - கடல், (வெண்ணெய் வைக்கும்) வாயகன்ற சட்டி
தாள்வரை - மலையடி வாரம்; பக்கத்துச் சிறுமலைகளை உடைய பெரிய மலைகள்
தாளி - செடியின் கொடி
தாறு - அளவு, ரேகை, பழுஞ்சிப்பு
தான்சேர் புணர்ப்பன் - தனக்குத் தகுதியான விளையாடல்களையுடையவன்
தான்தோன்றி - ஸ்வதந்திரன்; பிறர் யாசிக்கை அன்றிக்கே தானே வந்து தோன்றியவன்
தான்முகமாய் - தானே முக்கியமானவனாய்
தானம் - மேல் மேல்வரும் அதிசயமான ஸ்வரம்; கொடை, நீராட்டம்
தானநகர்கள் - தானமான-இருப்பிடமான நகரங்கள்.
தானவர் - அசுரர்களைச் சொல்லுகையன்றிக்கே இந்நிலத்தவர்க

ளையும் சொல்லுவர். - ஸ்தானத்தில் உள்ளவர் தானவர். ஸ்தானம் என்ற வடசொல் தானம் எனத்திரிந்தது.

தானவன் - இராவணன்

தானாங்கார மாய்ப்புக்கு - தானே எல்லா அகங்காரத் தோடு புகுந்து

தானானமை - தானான தன்மையை அடைந் தமை

தானுகந்த ஊர் - உகந்தருளின நிலங்களான திவ்ய தேசங்கள்

தானுங்கில்லான் - தானும் சக்தியுடையவன் அல்லன்

தானே தனக்குவமன் - தனக்கு உவமையில்லாதவன்

தானே தனித்தோன்றல் - ஒரு காரணத்தால் தோன்றிகிறவனல்லன்.

தானே பிறர்கட்கும் தற்றோன்றல் - வேண்டாதவரகட்கும் அந்தர் யாமியாயிருப்பவன்

தானேல் - தான் செய்தபடியாகில்; தானாகில்

தானை - சேனை, தூசு, ஆயுதம்

# தி

திக்குப்படுகை - கதியுண்டாகை, திக்கு-கதி. முறைபடுகை.

திகிரி - திருவாழி

திகை - தேமல், திசை

திங்கள் புக்கிருப்பார் - கர்ப்பிணி மாஸமாயிருக்கிறாள் என்பது போலே மாஸத் தாலே சொல்லுகை

திங்கள் மும்மாரி பெய்தல் - வெள்ளத்தாலும் வறட்சியாலும் அழிவு இல்லாமல் விட்டு விட்டு உச்சியில் எண்ணெய் வைப்பது போல் ஒன்பது நாள் வெய்யிலும் ஒருநாள் மழையுமாக இருக்கை.

திங்களம் பிள்ளை - அழகிய இளமையான சந்திரன்; திங்களாகிற அழகிய பிள்ளை.

திங்களும் நாளும் விழா - மாத உற்சவமும், நித்யமாய் உற்சவமும் நடத்துகை

திசைக்கருமம் - அந்தந்த திக்கில் ஏற்பட்ட கருமம், காரியம்

திசைக்கின்றது - மதி கெடுகின்றது; மோகிக்கிறது, அறிவு அழிகிறது

திசைக்கும் - திக்குக்கும்

திசைப்பு - திகைக்கை, அறிவு கலங்குகை

திசை ஞாலம் - திக்குடன் கூடிய பூமி

திசை நான்முகன் - நான்கு திக்கிலும் முகத்தை உடையவன்-பிரமன்

திசையுறு தெய்வம் - திக்பாலர்கள்

திட்கொடி - அவிழ்த்துக் கட்டாத கொடி

திட்டை - உரல், மேடு, திண்ணை

திடமொழி - பழுதுபோகாத வார்த்தையை உடைய வேதம்

திடர், திடல் - திட்டு, மேட்டுநிலம்

திடர் விளங்குகரை - மேடு, திருமுடிக்குறை, பெருமாளுடைய தலைபாகத்தில் உள்ள இடம்.

திணகடல் - கரையை மீறி போவதன்றிக்கே, நிற்கிற நிலையை ஒருவராலும் தடுக்க முடியாதபடி அதில் திண்ணியதாயிருக்கிற கடல்.

திண்களகமதிள் - திண்ணிதான சாந்து பூசிய மதிள், களகம் - சாந்து, அதாவது சுண்ணும்புச் சாந்து, கலவை என்றும் சொல்லுவர்.

திண்டி - யானை, பட்சணம், உணவு

திண்டிமிலேறு - திண்ணிதான திமிலையுடைய எருது.

திண்ணக்கலம் - கெட்டியாய், உடையாதிருக்கும் பாத்திரம், சட்டி

திண்ணன்வீடு - ஒருநாளும் அழியாத பரமபதம்

திண்ணென - நிச்சியமாக, அழகிதாக

திண்ணெனவு - ஆண்பிள்ளைத்தனம்

திண்ணை - உயர்ந்த நிலம், மேடை

திணர்; திணிம்பை - செறிவு, கொள்ளுகை

திணி வண்ணம் - செறிந்த/ சேர்ந்த நிறம்

திணுங்குதல் - கெட்டியாதல்

திதலை - தேமல்

திமிரம் - இருள்

திமிலர் - நெய்தல் நிலத்தவர்

திரள் - சமுதாயம்

திரளவும் - முழுவதும்

திரளை - உருண்டை

திரிஇடாமை - திரும்பாமை

திரிகால் சடகம் - ஊருகிற காலையுடைய வண்டி

திரிகை - சக்கரம், மீள்கை, சுழலுகை.

திரிதந்தாகிலும் - மீண்டாகிலும், திரிந்தாலும்

திரியட்டும் - திரும்பவும், மறுபடியும்

திரிதி - திரிவுதி

திரியவிட்டுவை - ஏறிட்டு எழுதிவை

திரியும் கலியுகம் - பால் திரிந்தது என்னுமா போலே பொருள்களின் தன்மைகள் மாறுபடும் கலியுகம்

திரியுண்ட - அல்லல்பட்ட

திரிவு - மாறுதல்

திருக்கடித்தானம் - மலைநாட்டுத் திருப்பதிகளில் ஒன்று

திரு - ஸ்ரீ, காந்தி, அழகு, செல்வம் ஒளிவிடுகை, பளபளப்பு

திருக்கண்ணபுரம் - சோழநாட்டுத் திருப்பதிகளில் ஒன்று

திருக்கண்ணங்குடி - சோழநாட்டுத் திருப்பதிகளில் ஒன்று

திருக்காப்பு - குறைவற்ற காபபு, அழகான ரக்ஷை. திருக்காப்பு சேர்க்கை என்று கோவிலில் சந்நிதி கதவுகளைச் சாத்துவதற்கு சொல்லுவது. கதவைச சாத்துவதும் காப்பு ஆகும்.

திருக்கால் - திருவடி.

திருக்குகம் - முற்றம், புடவை

திருக்காவணம் - திருப்பந்தல்

திருக்கிவைத்து - திருகிவைத்து, திருப்பிவைத்து

திருக்குடந்தை - கும்பகோணம், ஒரு திவ்ய தேசம்

திருக்குணம் - கல்யாணகுணங்கள், குணங்களுக்கு கல்யாணமாவது - நன்மையை உண்டுபண்ணுமது நன்மையான குணங்கள் என்றபடி

திருக்குதிப்பது - பாக்கியம் பெறுவது அடிமைச் செல்வம் பெறுவது

திருக்குருகூர் நம்பி - திருக்குருகூர் - ஆழ்வார் திருநகரி. அங்கே அவதரித்த நம்மாழ்வார்

திருக்குலம் - அரசகுலம், ஸ்ரீவைஷ்ணவர்களான பஞ்சமர் குலத்துக்கும் பெயர்.

திருக்குற்றொலியல் - குற்றொலியல்-சிறுதுண்டு ஒலியல்-துணி

திருக்குறளன் - வாமனப்பெருமாள்

திருக்குறளப்பன் - ஸ்ரீவாமனனான பெரும் உதவியாளன். ஸ்ரீரங்கம் வாமனப் பெருமாளுக்கு திருக்குறளப்பன் என்று பெயர்

திருக்குறிப்பு - மனதில் நினைவு

திருக்குறுங்குடி - பாண்டியநாட்டுத் திருப்பதிகளுள் ஒன்று. திருமங்கையாழ்வார் பரமபதித்த இடம்.

திருக்கைத்தல சேவை - பெருமாளை உற்சவ காலங்களில் ஊஞ்சல் சேவையின் போது கையில் எழுந்தருளிப் பண்ணிக்கொண்டு உலாவி வரும் சேவை.

திருக்கோட்டியூர் - 108 திவ்ய தேசங்களில் ஒன்று. பிரகலாதன் காரணமாக ருஷிகள் கோஷ்டியாக இருக்க, அதுக்காக ப்ரத்யக்ஷமாகத் தோன்றிய இடம் ஆகையாலே திருக்கோட்டியூர் என்றுபெயர்.

திருக்கோயில் - ஸ்ரீவிமானம், திவ்ய விமானம்

திருச்செங்குன்றூர் - மலையாள திவ்ய தேசம்

திருச்சாழல் - இரண்டு தோழியர் பேசும் பாடலுக்கு திருச்சாழல் என்று பெயர்.

திருச்சிற்றாறு - திருப்பதியில் பாயும் ஒரு ஆறு

திருத்தக்க செல்வம - திருவுக்குத்தக்க செலவம்

திருத்தக்கீர் - பிராட்டிக்குத் தகுதியான தேவர்

திருத்தி - கட்டளைப்பாடு, ஏவி, திருப்தி

திருத்தன் - திருப்தியுடையவன்

திருத்த உள - தெளிவாக உள்ளன

திருந்தாத ஓரைவர் - திருந்தாத சேதனரைப் போலே நின்று நிலிகிற ஐந்து இந்திரியங்கள்

திருந்து சேவடி - செல்வத்தைத் தெரிவிப்பதான திருவடி. திருவுந்து என்பது குறைந்து உந்துகை - முன்னே தள்ளுகையாய் பிரகாசிப்பிக்கையாகிறது.

திருந்துவேதம் - பகவானுடைய இயல்பு, வடிவு, குணம், செல்வங்கள் ஆகியவற்றை தெரிவிப்பதில் திருத்தமுடைய வேதம், நிறம் பெற்ற வேதம்

திருநாடு - பரமபதம்

திருநின்ற பக்கம் - பிராட்டி இருக்கும் வலது பக்கம்

திருப்படலிகை - படலிகை-கூடை, பூக்கடை

திருப்படித் தாமம்; திருப் பள்ளித்தாமம் - துளஸி, புஷ்பம்

திருப்பள்ளியறை - பெருமாள் இரவில் பள்ளிக்கு எழுந்தருளும் இடம்.

திருப்பாதகேசம் வர்ணம் - திருவடி முதல் திருமுடிவரை வர்ணித்தல்

திருப்பாவாடை - பாவாடை போட்டு விநியோகம் செய்யும் பிரசாதம், பாவாடை விரித்ததுணி, திருமலையில் திருப்பாவாடை உற்சவம் விசேஷம்

திருப்பிரம்பு - ஸ்ரீரங்கம் கோயிலில் குலசேகரன் படிக்கு வெளியிலுள்ள கணை, குறுக்குத்தடி

திருப்புன்னை - ஸ்ரீரங்கம் கோயிலில் சந்திர புஷ்கரிணிக்கரையிலுள்ள புன்னைமரம்

திருப்பொலிந்த சேவடி - அழகு விஞ்சியுள்ளதாய் செம்மையான திருவடிகள்

திருப்பொலிந்த வாகத்தான் - பிராட்டி பொலிவுடன் திருமேனியில் உறைந்து இருக்கும் எம்பெருமான்.

(தொடரும்)



# திருமாலின் துவாதச நாமங்கள்

திரு. எஸ். சுந்தரம் - திருமங்கலம்.

## கேசவன்

சதுஸ் சக்ரம் கேசவம் கனகப்
பிரியம் ||

நெற்றியில் திருமண் காப்பு இட்டுக்கொள்ளும்போது இவர் பெயரைச் சொல்லவேண்டும்.

நான்கு கைகளிலும் சக்ரா யுதத்துடன் தங்க நிறத்தில் விளங்கும் பெருமாள். இவருக்கு உகந்த மாதம் மார்கழி. தாயார் திருநாமம் - ஸ்ரீதேவி.

கேசவனாய் நின்று கீழ்த்
திசையிலும் நெற்றியிலும்
தேசுடை யாழிகள் நான்குடன்
செம்பசும் பொன்மலை போல்
வாசு மிகுந்தெனை மங்காமற்
காக்கு மறையதனால்
ஆசை மிகுந்த அயன்மக
வேதியலற்புதனே.

## நாராயணன்

நாராயணன் கநஸ்யாமம் சது:
சங்கம் நமாம்யஹம் ||

நான்கு கைகளிலும் சங்கு. இவருடைய நிறம் கருப்பு. வயிற்றில் திருமண் காப்பு இட்டுக் கொள்ளும் போது இவர் பெயரைச் சொல்லவேண்டும்.

இவருக்கு உகந்த மாதம் - தை.

தாயார் பெயர் - அம்ருதோத்பவ.

நாரணனாய் நல் வலம்புரி
நாலு முகந்தெடுத்தும்
ஊரணிமேக மெனவே உதரமு
மேற்கு நின்றும்
ஆரண நூல் தந்தருள்வாய்
அடைக்கலம் கொண்டருளும்
வாரண வெற்பில் மழைமுகில்
போல் நின்ற மாயவனே.

## மாதவன்

மாதவ மணிபங்காபம்
சிந்தயாமி சதுர்கதம் ||

நான்கு கைகளிலும் கதாயுதம். மார்பில் திருமண் காப்பு இட்டுக் கொளளும்போது இவருடைய பெயரைச் சொல்ல வேண்டும்.

தாயார் பெயர் - கமலம்.

இவருக்கு உகந்த மாதம் - மாசி.

மாதவ நாமமும் வான் கதை
நான்கு மணி நிறமும்
ஓதுமுறைப்படி ஏந்தி வரத்திலும்
மேலும் மல்கிப்
போதலர் மாதுடன் புந்தியிலன்
பாற் புகுந்தளிக்கும்
தூதனும் நாதனுமாய் தொல்லத்
திகிரிச் சுடரே.

## கோவிந்தன்

சந்த்ர பாஸம் சதுர் சார்ங்கம்
கோவிந்தம் பிஸம்ச்ரயே ||

நான்கு கைகளிலும் வில்-சந்திர வர்ணம் (நிறம்) திருமண் காப்பு இட்டுக் கொள்ளவேண்டிய இடமான முன் கழுத்தில் இட்டுக்கொள்ளும்போது இவருடைய பெயர் உச்சரிக்கவேண்டும்.

மாதம் - பங்குனி.

தாயார் பெயர் - சந்திர சகோதரி.

கோவிந்தன் எனும் குளிர்
மதியாகித் கொடியவரை
ஏவுந்தனுக்கருடங் தெற்கிலும்
உட்கழுத்தில் நின்று
மேவுந்தி திருவருளால் வினை
தீர்த்தெனையாண்டருளும்
பூவன்தொழ அத்திமாமலை
மேல் நின்ற புண்ணியனே.

## விஷ்ணு

விஷ்ணும் சதுர்ஹலதம் வந்தே
பத்மகிஞ்ஜல்க ஸந்நிபம் ||

நான்கு கைகளிலும் கலப்பை. தாமரைத் தாதுவின் நிறம். வயிற்றின் வலது புறம் திருமண்காப்பு இட்டுக்கொள்ளும் போது இவருடைய பெயரைச் சொல்லவேண்டும்.

தாயார் பெயர் - வராரோஹா

மாதம் - சித்திரை.

விட்டு வல வயிற்றின் கண்
வடக்கும் விடாது நின்று
மட்டவிழ் தாமரைத் தாது நிறங்
கொண்ட மேனியனாய்
தொட்ட கலப்பைகள் ஈரிரண்டாலும்
துயரறுக்கும்
கட்டெழிற் சோலை கரிகிரிமேல்
நின்ற கற்பகமே.

## மதுசூதனன்

சதுர் முஸலம் அப்ஜாமம்
ஸமச்ரயே மதுஸூதனம் ||

நான்கு கரங்களில் உலக்கை - தாமரைப்பூ வர்ணம்.

தாயார் பெயர் ஹரிவல்லபா - மாதம் வைகாசி.

வலது புஜத்தில் திருமண் காப்பு இட்டுக்கொள்ளும் போது இவருடைய பெயரைச் சொல்ல வேண்டும்.

மதுசூதனனென் வலம் புயம்
தென்கிழக்கென்றிவற்றில்
பதியாயிருந்து பொன் மாதுறை
பங்கய வண்ணனுமாய்
முதுமா வினைகளுக்கும்
முயலங்களீரண்டால்
மதுவாரிளம் பொழில் வாரண
வெற்பின் மழை முகிலே.

## திரிவிக்ரமன்

அக்னி வர்ணம் சது: கட்கம்
பாவயாமி திருவிக்கிரமம் ||

நான்கு கரங்களில் கத்தி - நெருப்பு வர்ணம்.

தாயார் பெயர் விஷ்ணு பத்னீ.

வலக்கழுத்தில் திருமண்காப்பு இட்டுக்கொள்ளும் போது இவருடைய பெயரைச் சொல்ல வேண்டும். மாதம் - ஆனி.

திருவிக்ரமன் திகழ் நீ நிறத்தன்
தெளிவுடையவன்
உருவிக் கரங்களில் ஈரிரண்டேந்தி
வலக்கழுத்தும்
செருவிக்கிரம் தரக்கர் திக்கும்
சிறந்தாளு மிறை
மருவிக்கரிசிரி மேல் வரந் தந்திடு
மன்னவனே.

## வாமனன்

வாமனன் பால சூர்யாபம்
சதுர் வஜ்ரம் விபாவயே ||

நான்கு கரங்களில் வஜ்ராயுதம் - சூரிய வர்ணம். தாயார் பெயர் - வைஷ்ணவி. மாதம் - ஆடி. வயிற்றின் இடது புறம் திருமண்காப்பு இட்டுக் கொள்ளும்போது இவருடைய பெயரைச் சொல்ல வேண்டும்.

வாமனனென்றன் வாமோதரமும்
வாயுவின் திசையும்
தாமமடைந்து தருண அருக்கன்
நிறத்தனுமாய்ச்
சேம மரக்கலம் செம்பவீயீரிரண்டால்
திகழும்
நாமங்கை மேவிய நான்முகன்
வேதியல் நம்பரனே

## ஸ்ரீதரன்

ஸ்ரீதரம் புண்டரீகாக்ஷம் சது:
பட்டஸ மாச்ரயே ||

நான்கு கரங்களில் பட்டஸம் என்ற ஆயுதம். வெண்தாமரை வர்ணம். தாயார் பெயர் சார்ங்கினி. இடது புஜத்தில் திருமண் காப்பு இட்டுக்கொள்ளும்போது இவர் பெயரை உச்சரிக்க வேண்டும்.

மாதம் - ஆவணி.

சிரார் சிரீதரனுச் சிவன்
திக்கு மிடப்புயமும்
ஏராரிடங் கொண்டு இலங்கு
வெண்டாமரை மேனியனாய்ப்
பாராய பட்டயமும் ஈரிரண்டாலும்
பயமறுக்கும்
ஆராவமுது அத்திமாமலை மேல்
நின்ற அச்சுதனே

## ஹிருஷீகேசன்

சதுர் முத்துரமப்யேமி ஹிருஷீகேசம்
தடித் ப்ரவம் ||

நான்கு கரங்களில் சுத்தி, மின்னல் நிற வர்ணம். தாயார் பெயர் - தேவ தேவிகா. உரிய இடம் - இடக் கழுத்து. மாதம் - புரட்டாசி.

என்னிருடி கேசனிறை கிழிடக்
கழித்தென்றிவட்டில்
நன்னிலை மின்னுருவாய்
நாழுமுற்கரங்கொண்டளிக்கும்
பொன்னகில் சேர்த்தலைக்கும்
புனல்வேகை வடகரையில்
தென்னுகந்து தொழும் தேன
வேதியர் தெய்வமொன்றே

## பத்மநாபன்

பஞ்சாயுதம் பத்மநாபம்
ப்ரணமாம்யர்க்க ரோசிஷம் ||

சங்கு, சக்ரம், கதை, வில், வாள் என்ற பஞ்சாயுதங்களை ஏற்றவர். தாயார் பெயர் - மஹாலட்சுமி. உரிய இடம் - முதுகு. மாதம் - ஐப்பசி.

எம் பத்மநாபனும் என் பின் மனம்
பற்றி மன்னி நின்று
வெம்பொற் கதிரவனாயிரம் மேவிய
மெய்யுருவாய்
அம் பொற்கரங்களில் ஐம்படை
கொண்டஞ்ச லென்றளிக்கும்
செம் பொற்றிரு மதின் சூழ்
சிந்தூரச் சலச் சேவகனே.

## தாமோதரன்

தாமோதரன் சது: பாசம்
இந்த்ர கோபம் நிபம் பஜே ||

நான்கு கரங்களில் - கயிறுகள். சிவப்பு வர்ணம். தாயார் பெயர் ஸுர ஸுந்தரி. பின் கழுத்தில் திருமண் காப்பு இட்டுக் கொள்ளும்போது இவருடைய பெயரைச் சொல்ல வேண்டும். மாதம் - கார்த்திகை.

தாமோதரன் என்றன் தாமங்கள்
நாலு கரங்களிற் கொண்டு
ஆமோதரமென ஆகத்திலுட்
புறம் பிற்கழுத்தும்
தாமோறெங்கதிரோனென
என்னுளிருனறுக்கும்
மரமோ மாற்றும் மதிளத்தியூரின்
மரகதமே.

இந்த துவாதச நாமங்கள் மிக மகிமை பொருந்தியவை. நாராயணனுடைய திருநாமங்களை கூறுவதோடு மட்டுமல்லாமல், ஆயுதங்கள் - தாயார் திருநாமங்கள், நிறம், மாதம் முதலியவை ஒவ்வொரு துவாதச நாமங்களுக்கும் கொடுக்கப்பட்டிருக்கிறது. ❁



# ஸ்ரீ வேங்கடேஸ்வரா
# வன மேம்பாட்டுத் திட்டங்கள்

மனித இனம் என்றென்றும் மகிழ்ச்சியும், அதிசயமும் கொள்ளும் வகையில் காடுகள் ஆண்டாண்டு காலமாக விளங்கிவருகின்றன. இயற்கையின் ஆற்றலுக்கும் அழகுக்கும் என்றென்றும் புதுப்பொலிவும், புதுப்பொருளும் அளித்து வருவன காடுகளாகும்.

இத்தகு விலைமதிப்பற்ற இயற்கை வளத்தை புனிதமிகு திருமலையில் பாதுகாத்திடும் வகையில் 1981ஆம் ஆண்டு 'காடு வளர்ப்புத் திட்டம்' ஒன்றினை பெருமளவில் பெருமுயற்சியுடன் ஒரு புனித வேள்வியாக மேற்கொண்டு பல்வேறு இனங்களைச் சேர்ந்த சுமார் 25 லட்சம் மரங்களை திருப்பதி மற்றும் திருமலையில் வளர்க்கும் பணியில் தி.தி. தேவஸ்தானம் ஈடுபட்டது. இதன் மூலமாக திருமலை மலைச்சரிவுகள், திருப்பதி நகரம் ஆகிய பகுதிகள் யாவும் பசுமையான 'வனச் செல்வத்துடன்' விளங்கிடவேண்டும் என்பதே திருமலை திருப்பதி தேவஸ்தானத்தார் பெருவிருப்பமாகும்.

துவக்கப்பட்ட திட்டத்தின் பெருவெற்றியின் தூண்டுதலினால் தற்போது திருமலை திருப்பதி தேவஸ்தானம் பல்வேறு திட்டங்களைப் புகுத்தியுள்ளது. அதுதான் "ஸ்ரீவேங்கடேஸ்வரா காடு மேம்பாட்டுத்திட்டம்". இத்திட்டத்தினால், திருமலை திருப்பதி தேவஸ்தானம் மேற்கொண்டுள்ள இப்புது முயற்சிகளில் யாத்திரிகப் பொதுமக்களும் பங்கேற்கும் வகையில் வழிமுறைகள் செய்யப்பட்டுள்ளன. மேலும், இத்திட்டத்திற்கு நன்கொடை வழங்கும் பக்தர்களுக்கு பலவிதமான நன்மைகளும் செய்யப்பட்டுள்ளன. இந்த 'வேங்கடேஸ்வரா காடு மேம்பாட்டுத் திட்டத்தின்' முக்கிய விவரங்கள் பின்வருமாறு:-

### விருக்ஷ ஸம்வர்த்தனம்

நன்கொடை ரூ. 25,000

(மரம் வளர்ப்புத் திட்டம்)

இத்திட்டத்தின் கீழ் 500 செடிகள் திருமலை மற்றும் திருப்பதியில் நடவப்படும். இத்திட்டத்திற்கு நன்கொடை அளிக்கும் நபரின் அல்லது அவர் விரும்பும் நபரின் பெயரில் இம்மரங்கள், இச்செடிகள் அழைக்கப்படும். இச்செடிகள் ஐந்தாண்டுகளுக்குப் பராமரிக்கப்படும்.

### விருக்ஷ பிரஸாதம்

நன்கொடை ரூ. 15000

இத்திட்டத்தின் கீழ் ஒவ்வொரு ஆண்டும் பயன்தரக்கூடிய 100 பழ அல்லது மலர் விதைகள் நன்கொடையாளர் அல்லது அவர் விரும்பும் நபரின் பெயரில் 10 ஆண்டுகளுக்கு விநியோகிக்கப்படும்.

### ஸ்மாரக வனாலு (நினைவு மரங்கள்)

நன்கொடை ரூ.5000

இத்திட்டத்தின் கீழ் திருமலை - திருப்பதி மலைச்சரிவுகளில் உள்ள தோப்பு ஒன்றில் அங்கு விளையக்கூடிய ஒரு குறிப்பிட்ட 10 மரவகைகள் நடப்பட்டு, 5 ஆண்டுகள் அவை பராமரிக்கப்படும். நன்கொடையாளரின் பெயர் அத்தோப்பிற்கு வைக்கப்படும்.

### வன சம்ரக்ஷண பாகஸ்வாம்யம்

நன்கொடை : ரூ. 2000

(காடு வளர்ப்பில் நும் பங்கு)

இத்திட்டத்தின் கீழ் ஏழுமலைகளில் இயற்கையான காட்டுச் சூழ்நிலை பாதுகாத்து மேம்படுத்தப்படும். இத்திட்டத்தில் பங்கேற்கும் நன்கொடையாளரின் ஆர்வத்தை நினைவுகூறும் வகையில் அவர்தம் பெயர் தேர்ந்த இடத்தில் காட்சியாக்கப்படும்.

சலுகை மாற்றங்களுடன் கூடிய இப்புதிய ஸ்ரீவேங்கடேஸ்வரா வன மேம்பாட்டுத் திட்டம் 1-2-96 முதற்கொண்டு செயல்படும். 31-1-96 தேதிக்கு முன்பு வரை இத்திட்டத்திற்கென நன்கொடை வழங்கிய பக்தர்கள், இத்திட்டத்திற்கென முன்பு அளிக்கப்பட்ட சலுகைகளைப் பெறுவர். நன்கொடை அளிக்கப்படும் மேற்படி தொகைகளுக்கு பிரிவு 35 CCB-இன் கீழ் 100 சதவிகிதம் வருமானவரி விலக்கு உண்டு.

கீழ்க்கண்ட முகவரிக்கு நன்கொடை அனுப்புங்கள்

THE EXECUTIVE OFFICER, T.T. DEVASTHANAMS - TIRUPATI-517 501.

********

Published on behalf of T. T. Devasthanams by N. S. Ramamurthy, M.A., Editor and

Printed at T.T.D. Press by P. Mohan Rao, Manager, T.T.D. Press, Tirupati - 517 507

